ஸ்ரீ :

# ஸ்ரீராமாநுஜன் 22

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

10—7—50 விக்ருதிஸூ ஆனிமீ

## எம்பெருமானாரும் - காளியமர்த்தனமும்.

* ஹே ராமாநுஜ ! ஹே ஜகத்த்ரயகுரோ ! ஹே புண்டரீகாக்ஷ ! மாம் ஹே கோபீஜநநாத பாலய பரம் ஜாநாமி நத்வாம் விநா * என்ற முகுந்த மாலை ச்லோகத்தில் ராமாநுஜனென்றழைக்கப்பட்ட கண்ணபிரானுடைய திருநாமத்தைக் கொண்ட எம்பெருமானார் கண்ணபிரான் செய்த செயல்களையெல்லாம் ஒருவாறு செய்தருளி யிருக்கிறாரென்று பரக்க நிரூபிக்கிற ப்ரகார மொன்றுண்டு. கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களுள் காளியமர்த்தனமு மொன்றாதலால் அதனை எம்பெருமானார் செய்தருளிய விதம் ஈண்டு நிரூபிக்கப் படுகிறது.

யமுனையாற்றில் ஓர் மடுவிலிருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினியினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினனென்பது காளியமர்த்தன வரலாறு. இவ்வரலாற்றை வேதாந்த தேசிகன் யாதவாப் யுதயத்தில் கூறுமிடத்து நான்காவது ஸர்க்கத்தில் (ச்லோ. 125.) * விவிதமுநிஜநோபஜீவ்யதீர்த்தா விகமிதஸர்ப்பகணா பரேண பும்ஸா| அபஜத யமுநா விசுத்திமக்ர்யாம் சமிதபஹிர்மதஸம்ப்லவா த்ரயீவ—விவிதமுநிஜநோபஜீவ்ய தீர்த்தா விகமித ஸர்ப்பகணா பரேண பும்ஸா, அபஜத யமுநா விசுத்திமக்ர்யாம் சமித பஹிர்மதஸம்ப்லவா த்ரயீவ * என்கிற ச்லோகத்தினால் கூறினர். ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி ராமாநுஜர் செய்தருளின செயலையே கண்ணபிரான் செய்த செயலுக்கு உவமையாகக் காட்டியருளினர். எங்ஙனே யென்னில், ஐந்தலை வாய்நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்ததானது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம் போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி எமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்ததானது—ஸ்வாமி ராமாநுஜர், பிறர் கூறின தவறான பொருள்களை யகற்றி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனையாற்றின் ஸ்தானத்தில் வேதம் கொள்ளப்பட்டது ; காளியன் ஸ்தாநத்தில் குதர்க்கவாதிகள் கொள்ளப்பட்டார்கள் ; கண்ணனுடைய ஸ்தானத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் கொள்ளப்பட்டார். * தூய பெருநீர் யமுனைத்துறைவனை * என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல, வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடையதாயிருந்

கையாலே வேதத்தை யமுனையாற்றின் ஸ்தானத்தில் கொள்வது பொருந்தும். குதர்க்கவாதிகளை காளியன் ஸ்தானத்தில் கொள்வதற்கான பொருத்தம் இனி உபபாதிக்கப்படுகிறது.

காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை உமிழ்ந்து நாசத்தை விளைத்தானென்று புராணங் கூறும். அப்படியே குதர்க்கவாதிகளும் ஐந்து விதமான துர்வாதங்களாலே பரமார்த்த நாசத்தை விளைவிக்கின்றனர். எங்ஙனே யென்னில் ;

1. ஈச்வரனென்று ஒருவனைக் கொள்வது கூடாது; ஈச்வரனேயில்லை—என்பது ஒரு குத்ஸிதவாதம்.

2. ஈச்வரனுள்ளனென்று இசைந்தாலும் அவன் அநுமாநத்தினால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்திரத்தால் ஸிதிப்பவனல்லன் என்பது மற்றொரு குத்ஸிதவாதம்.

3. சாஸ்திரங்களைக் கொண்டே ஈச்வரனை அங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லையென்று வாதித்தல் வேறொரு குத்ஸிதவாதம்.

4. ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பலபல ஈச்வரர்களுளரென்று பல தெய்வங்களுக்கு ஈச்வரத்வம் காட்டி வாதித்தல் இன்னுமொரு குத்ஸிதவாதம்.

5. பிரபஞ்சமே கிடையாது, ஸர்வம் சூனியம் என்று ஸர்வ சூன்யவாதம் பண்ணுகை ஸர்வோத்துங்கமான குத்ஸிதவாதம்.

ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்த வாதங்களினால் வேதத்தைக் கெடுத்த குதர்க்கவாதிகள் காளிய ஸ்தானத்திலே கொள்ளப்படுவது பொருந்தும். இக்கெடுதல்களை யெல்லாம் நம் ஆசார்ய ஸார்வபௌமர் ஸதர்த்த நிரூபணங்களினாலே போக்கி யருளினர்.

இங்கே மற்றொரு விசேஷமும் காணலாம். * வாய்த்த காளியன்மேல் நடமாடிய கூத்தனார் * என்று சூடிக்கொடுத்த சுடர்க்கொடி பணித்தபடி காளியன் தலையிலே கண்ண பிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போல, ஸ்வாமி யெம்பெருமானாருடைய ஸம்பந்த ஸம்பந்தமுடைய நாம் * நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே * என்று திருமாலை முதற் பாசுரத்தில் தொண்டரடிப்பொடி யாழ்வாரருளிச் செய்த கணக்கிலே யமகிங்கரர்களின் தலையிலே அடியிட்டுக் கூத்தாடப் பெறுவோம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

## திவ்யப்ரபந்த விசேஷார்த்தம்.

**கோங்கலரும் பொழில் மாலிருஞ் சோலையில் கொன்றைகள்மேல்**
**தூங்குபொன்மாலைகளோடு உடனாய்நின்று தூங்குகின்றேன்**
**பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்**
**சார்ங்கவில் நாணொலியும் தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ.**

இப்பாசுரம் நாச்சியார் திருமொழியில் ஒன்பதாவது பதிகமாகிய * சிந்துரச் செம்பொடியில் ஒன்பதாவது பாசுரம். இதிலுள்ள விசேஷார்த்தத்தைச் சாமானியர்கள் அறியகில்லார். பல தமிழ்ப்புலவர்களிடத்தில் இப்பாசுரத்தைக் கொடுத்துப் பொருள் சொல்லுமாறு வேண்டிக் கொண்டேன். "பெரியார்கள் வியாக்கியானம் செய்திருப்பார்களே" என்பதுதான் உத்தரமாகத்தேறியது. உண்மையில் நம் ஆசாரியர்கள் அருளிச்செய்த வியாக்கியானங்கொண்டே அறியவேண்டிய அரும் பொருளமைந்த பாசுரங்களில் இதுவுமொன்று.

திருமாலிருஞ் சோலைமலையிற் கொன்றை மரங்களின் மீது தொங்குகின்ற கொன்றைப்பூ மாலைகளோடொப்ப நானும் தூங்குகின்றேன்—என்று கூறுகின்ற ஆண்டாளுடைய

கருத்து யாதெனில், கேண்மின் ;—பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீ ஸூக்தியை முந்துற உதாஹரித்துப் பின்னை விவரிக்கின்றோம்.

> " தாமஸ புருஷர்கள் புகும் தேசமன்று; ஸாத்விகர் இதுகொண்டு காரியங்கொள்ளார்கள். பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்து பகவதர்ஹமான வஸ்து இங்ஙனே இழந்திருந்து க்லேசப்படுவதே." —என்பது வியாக்யான ஸ்ரீஸூக்தி.

(விவரணம்) திருமாலிருஞ்சோலைமலையானது மிகச் சிறந்த ஸ்ரீவைஷ்ணவ க்ஷேத்திரமாதலால் அங்கு ஸாத்விக புருஷர்கள் ஏறிப்போவார்களேயன்றி ராஜஸ தாமஸபுருஷர்கள் ஏறிப்போகமாட்டார்கள் என்பதை முன்னம் நெஞ்சிற் பதியவைத்துக்கொள்க. கொன்றைப்பூக்கள் தேவதாந்தரங்களின் ஆராதனைக்கு உபயோகப்படக் கூடியவையாதலால் அவை ராஜஸதாமஸபுருஷர்களால் கொள்ளப்படுமே யல்லது ஸாத்விக புருஷர்களால் கொள்ளப்படமாட்டா என்பதும் அறியத்தக்கது. ஸாத்விகர்கள் மாத்திரமே புகுமிடமாய் ராஜஸதாமஸர்கள் எட்டிப்பாராத விடமான திருமாலிருஞ்சோலையில் கொன்றைகள் பூத்தால் அவற்றைக் கொள்வார் ஆர்? என்று பார்க்கவேணும். ஆருமில்லை யென்பது தேறும். அவை அங்கே விழ்வதொழிய வேறோர் உபயோகமும் அவற்றுக்கில்லை யென்றே சொல்லவேண்டும். ஆகவே அங்குற்றைக் கொன்றை மலர்களின் தோற்றம் எப்படி வீணோ அப்படியே என் ஜன்மமும் வீணாயிற்றே! என்று நொந்து பேசினபடி.

திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில் " கன்னவிலுங் காட்டகத்தோர் வல்லிக் கடிமலரின், நன்னறுவாசம் மற்றாரானு மெய்தாமே, மன்னும் வறு நிலத்து வாளாங்கு உகுத்ததுபோல், என்னுடைய பெண்மையும் என்னலனுமென்முலையும், மன்னுமலர் மங்கை மைந்தன், கணபுரத்துப் பொன்மலை போல் நின்றவன் தன் பொன்னகலம் தோயாவேல், என்னிவைதான் வாளா எனக்கே பொறையாகி, முன்னிருந்து மூக்கின்று மூவாமை காப்பதோர், மன்னுமருந்தறிவீரில்லையே!" என்றருளிச் செய்தது மிங்கு நினைக்கத்தக்கது.

ஆக இவ்வளவும் முன்னிரண்டடிகளின் விசேஷார்த்தம். இனிப் பின்னடிகளின் விசேஷார்த்தமாவது ;—சங்கின் ஒலியும் சார்ங்கவில் நாணொலியும் என் காதில் எப்போது விழும் என்கிறாள் பின்னடிகளில். " இரண்டவதாரத்தில் இரண்டு பிராட்டிமார்க்கு உதவினது தனக்கு ஒருத்திக்குமே வேண்டும்படியாயிற்று இவள் தசை" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. இரண்டவதாரத்தில் இரண்டு பிராட்டிமார்க்கு உதவினபடிகளாவன ;—

1. கண்ணபிரானையன்றி மற்று எவனையும் கனவிலுங் கருதாதிருந்த ருக்மிணிப் பிராட்டிக்கு சிசுபாலனோடு விவாஹம் நடப்பதாகக் கோடித்து ஸித்தமாயிருந்த ஸமயத்தில் கண்ணபிரானது வரவை எதிர்பார்த்திருந்த அப்பிராட்டியின் நெஞ்சு முறிந்துபோய் இனி நாம் உயிர் துறப்பதே நல்லுபாயம் என்று நிச்சயித்திருந்த க்ஷணத்தில் கண்ணபிரான் பதறி ஓடி வந்து புறச் சோலையிலே நின்று தனது ஸ்ரீபாஞ்சஜந்யத்தை பம்! பம்!! என்று ஊத, அதனோசையானது அந்த ருக்மிணிப் பிராட்டியின் செவியிற் புகுந்து எப்படிப்பட்ட ஆனந்தத்தை உண்டாக்கிற்றோ, அப்படிப்பட்ட ஆனந்தம் எனக்கு என்றைக்கு உண்டாகும்!

2. இராவணனானவன் ஸீதையிடம் வந்து இராமபிரான் இறந்தனனாக ஒரு பொய்க் கூற்றுக் கூறி ராமனது மாயா சிரஸ்ஸைக் காட்டி வெருட்டினபோது அப்பிராட்டி வருந்திக் கிடக்கும் க்ஷணத்திலே இராமபிரான் கடற்கரையிலே நின்று தனது சார்ங்க வில்லை டைம் டைம்!! என்று ஒலிப்பிக்க, அவ்வொலியானது ஸீதையின் செவியிற் புகுந்து எப்படிப்பட்ட ஆனந்தத்தைவிளைத்ததோ அப்படிப்பட்ட ஆனந்தம் எனக்கு என்றைக்கு உண்டாகும்! என்றாளாயிற்று. ... ... ... ... ... *

# இதிஹாஸபுராண விசேஷார்த்த விறு.

எம்பெருமான் இராமபிரானுகவும் கண்ணபிரானுகவும் திருவவதாரங்கள் செய்தபோது பரமபக்தர்களிடத்திலே தன்னுடைய விசேஷாபிமானத்தை விசேஷ முறையில் காட்டி யிருக்கிருன். பக்தர்களுக்குத் தன் திருமேனியைக் கொடுத்தருள்வதுதான் சிறந்த வெகுமதி. அதாவது பரிஷ்வங்கமென்று சொல்லப்படுகிற ஆலிங்கனம். இது ஸ்ரீராம க்ருஷ்ணவதாரங்களில் மூன்று பக்தர்களுக்கு அருளப்பட்டதாகத் தெரியவருகிறது. ஸ்ரீராமாவதாரத்தில் திருவடிக்கும் பரதாழ்வானுக்கும் ; ஸ்ரீ க்ருஷ்ணவதாரத்தில் அக்ரூரனுக்கு.

இவ்விஷயத்திற்கு முறையே பிரமாணங்களாவன (1) ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டத்தில் (1—14) * **ஏஷ ஸர்வஸ்வ பூதஸ் து பரிஷ்வங்கோ ஹநூமத:, மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ் தஸ்ய மஹாத்மந:** * என்கிற ச்லோகம் திருவடிக்குக் கிடைத்த ஆலிங்கனத்தைச் சொல்லுவது. (2) யுத்தகாண்டத்திலேயே (130—38.) * **தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்தச் சிரஸ்யாக்ஷிபதம் கதம், அங்கே பரதமாரோப்ய முதித: பரிஷஸ்வஜே.** * என்கிற ச்லோகம் பரதாழ்வானுக்குக் கிடைத்த ஆலிங்கனத்தைச் சொல்லுவது. (3) ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் **(5—18—2)** * **ஸோப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேந பாணிநா, ஸம்ஸ்ப்ருச்ய ஆக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே** * என்கிற ச்லோகம் அக்ரூரனுக்குக் கிடைத்த ஆலிங்கனத்தைச் சொல்லுவது. ஆக இம்மூன்று பரிஷ்வங்கங்களிலும் பரஸ்பரமுள்ள வாசியை நம் ஆசாரியர்கள் அழகாகக் கண்டறிந்துள்ளார்களென்று தோன்றுகிறது.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (2—35.) * வித்யை தாயாகப் பெற்று * இத்யாதியான பெரிய சூர்ணையில் "**பரதாக்ரூரமாருதிகளைப் பரிஷ்வங்கித்த** மணிமிகுமார்விலே" என்றுள்ளது. மேலே விளங்கக் காட்டிய மூன்று ப்ரமாணங்களிற் கண்ட மூவரும் இங்கு எடுக்கப்பட்டிருக்கிருர்கள். ஆனுல் முறை தவறியிருக்கின்றது. "**மாருதிபரதாக்ரூரர்களை**" என்றிருக்க வேண்டியதன்ருே முறைமை. முதல்பரிஷ்வங்கம் மாருதிக்கு; அதற்கடுத்த பரிஷ்வங்கம் பரதாழ்வானுக்கு. கடையான பரிஷ்வங்கம் அக்ரூரனுக்கு—என்றிப்படி ப்ரமாண ப்ரதிபந்நமான முறைமையிருக்க, ராமாவதார பக்தர்களான இருவரின் இடையே க்ருஷ்ணவதார பக்தனை அக்ரூரனைக் கொண்டு தள்ளியும், முதல் பரிஷ்வங்கம் பெற்ற மாருதியைப் பின்னே தள்ளியும் "பரதாக்ரூரமாருதிகளை" என்று விலக்ஷணக்ரமமாக அருளிச் செய்திருப்பது என்கொண்டு? என்று விமர்சகர்கள் ஆராய வேண்டுவது அவசியம். யாரேனும் பெரியார் ஆராய்ந்து ஒரு வியாஸமருளினல் நன்ரும். ... ... ... *

---

## ஆசார்யஹ்ருதய வியாக்யான வெளியீடு.

நமது ஸம்பிரதாய க்ரந்தங்களுள் ஒப்புயர்வற்றதான ஆசார்ய ஹ்ருதயத்திற்கு நம் மணவாளமாமுனிகள் அருளிச் செய்த வியாக்கியானம் தமிழ் லிபியில் இப்போது எங்கும் கிடைப்பதரிது. இந்த திவ்ய க்ரந்தம் 35—40 வருஷங்களுக்கு முன் ஒரு தடவையே தமிழ் லிபியில் பதிப்பிக்கப்பட்டிருந்தது. அதுவும் த்ருப்திகரமான முறையில் இல்லையென்று பலர் வருந்தத் தக்கதா யிருந்தது. அதுவும் மிகவும் துர்லபமாய் விட்டபடியால் கூடிய மட்டில் பிழையில்லாதபடி சோதித்துப் பதிப்பிக்கப்பட்டு வருமிதனில் முதலிரண்டு பிரகரணங்கள் வெளிவந்துவிட்டன. விலை ரூ. 2—0—0. மேலிரண்டு பிரகரணங்கள் விஜயதசமிக்குள் வெளிவரும்.

கிடைக்குமிடம்—

**கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.**

ஸ்ரீரஸ்து.

[illegible]

ஸ்ரீமதே ஹயவதநபரப்ரஹ்மணே நம:

# ரோதஸீதத்வ போதிநீ.

(ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம். அண்ணங்கராசாரியர்)

[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥
[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

## அவதாரிகை.

1. ஸம்ஸ்க்ருத ஸாஹித்யக்ரந்த பரிசயமுள்ளார்க்கு ரோதஸீ என்றுமொருபதம் பல காலுமடிபட்டிருக்கும். ஸூர்யனுக்குத் தனியே சில பெயர்களும், சந்திரனுக்குத் தனியே சில பெயர்களுமிருக்கச் செய்தேயும் " ஏகயோக்த்யா புஷ்பவந்தௌ திவாகரநிசாகரௌ " என்கிற படியே 'புஷ்பவந்தௌ' என்கிற வொருபதம் ஸூர்ய சந்திரரிருவர்க்கும் சேர்ந்து வாசகமாக இருப்பதுபோல, விண்ணுலகுக்கும் மண்ணுலகுக்கும் தனித்தனி வாசகங்களான பதங்கள் பல கிடந்தாலும் அவ்விரண்டுலகங்கட்கும் ஒரே வாசகமான பதம் ரோதஸீ என்பது. * வேதாந்தேஷு யமாஹுரேகபுருஷம் வ்யாப்ய ஸ்திதம் ரோதஸீ * இத்யாதி ச்லோகங்களை நமக்கு ப்ரவசநஞ் செய்யும்போது சாஸ்த்ரதத்வவித்துக்களான உபாத்யாயர்கள் இப்பதத்தைப் பற்றின உண்மைகளை எடுத்துரைப்பதுண்டு. * த்யாவாப்ருதிவ்யௌ ரோதஸ்யௌ த்யாவாபூமீ ச ரோதஸீ* என்கிற அமரகோசமும், ஏவம்விதமான வைஜயந்தீகோசமும் முதலான நிகண்டுக்களைக் கொண்டும் நாம் தெளிவு பெறுகின்றோம். 'ரோதஸ்யௌ' என்கிற வொரு பதமும், 'ரோதஸீ' என்கிற வொரு பதமுமாக இரண்டு பதங்கள் த்யாவாப்ருதிவிகளுக்கு வாசகமாகக் காணப்படுகின்றன. இவற்றுள் 'ரோதஸ்யௌ' என்கிற பதத்தில் விவாத மொன்றும் காண்பதில்லை. ரோதஸீ என்கிற பதத்தில் மாத்திரம் ஒரு விசாரமுண்டு. இச்சொல்லானது 'வாஸஸீ' இத்யாதி பதங்கள் போலே த்விவசநாந்தமா? அல்லது கௌரீ நாரீ ராக்ஷஸீ இத்யாதிகள் போலே ஏகவசநாந்தமா? என்று.

2. கூடவே 'ரோதஸ்யௌ' என்கிற பதம் காண்கிறபடியாலே அதுதான் த்விவசநாந்தம், ரோதஸீ என்பது ஏகவசநாந்தம்; ரோதஸீ, ரோதஸ்யௌ, ரோதஸ்ய:—என்று சப்த ப்ரக்ரியை; என்று சில பண்டிதர்கள் கூறுவர்கள். மற்றும் சில பண்டிதர்களோ வென்னில், ரோத:, ரோதஸீ, ரோதாம்ஸி என்கிற சப்தப்ரக்ரியையில் ரோதஸீ என்று த்விவசநாந்தமாகக்

கொள்ளப்படலாம்; ரோதஸீ, ரோதஸ்யௌ, ரோதஸ்ய: என்கிற சப்த ப்ரக்ரியையிலே அதுவே ஏகவசநாந்தமாகவும் கொள்ளப்படலாம்; ஒன்றுக்கு மற்றொன்று பாதகமன்று; ஸகாராந்தமான ரோதஸ் சப்தம் போலே ஈகாராந்தமான ரோதஸீ சப்தமுமுண்டாதலால் இரண்டு வகையும் கொள்ளத்தக்கதே—என்கிறார்கள். இதைப் பற்றித் திடமான நிர்ணயம் செய்வதற்கே இவ்வாராய்ச்சி நூல் எழுகின்றது. த்யாவா ப்ருதிவிகள் என்கிற பொருளில் ரோதஸீ என்பது த்விவசநாந்தமே யல்லது ஏகவசநாந்தமாயிருக்கத் தகுதியே கிடையாது என்பது பல பல ப்ராமாணிக க்ரந்தங்களைக் கொண்டு நிரூபிக்கப்படுகின்றது. கௌரீசப்தம் போலே ஈகாராந்தமாய் ஏகவசநாந்தமான ரோதஸீ சப்தமுமொன்றுண்டு; ஆனால் அதற்கு த்யாவாப்ருதிவிகளென்கிற பொருள் கிடையாது; உண்டென்று சிலர் எழுதியிருந்தால் அது ப்ரமத்தாலும் ப்ரமாதத்தாலுமே யொழிய யதார்த்த ஞானத்தினாலன்று என்பதைப் பல உபபத்திகளுடன் இங்கு விளக்குவோம்.

## இனி க்ரந்தாரம்பம்.

3. ஸ்ரீராமாயண யுத்தகாண்டத்தில் (22-6) *சொதஸீ ஸம்பபௌசைவ—ரோதஸீ ஸம்பபாலேவ* என்னுமிடத்தில் வையாகரணக்ரேஸரரான ஸ்ரீ கோவிந்தராஜர் தம்முடைய வியாக்யானத்தில் * ஏகவசநம் ஆர்ஷம் * என்று எழுதியுள்ளார். மூலத்தில் ரோதஸீ என்கிற த்விவசநத்திற்குச் சேர ஸம்பபால என்று க்ரியாபதம் ஏகவசனமாயிருப்பது கூடாதென்றும், ஸம்பேலது: என்று த்விவசனமாகவேயிருக்கவேண்டுமென்றும், அப்படியிராமல் 'ஸம்பபால' என்று ஏகவசநமாயிருப்பது சாஸ்த்ர விருத்தமானாலும் ஆர்ஷத்வாத் இசையத்தக்கது என்றும் கோவிந்தராஜருடைய அபிப்ராயம் வ்யக்தமாகக் காண்கிறது. ரோதஸீ என்று ஏகவசநாந்த பதமும் ஒன்றுண்டென்று கோவிந்தராஜர் க்ரஹித்திருந்தால் "ஏகவசநமார்ஷம்" என்று இவர் எழுத ப்ரஸக்தியேயிராது. வசந விபர்யய சங்கையே இவர்க்கு உதித்திராது. ஆகவே ரோதஸீ யென்பது த்விவசநாந்தமேயொழிய ஏகவசநாந்தமன்று, அப்படி சப்தஸ்வரூபம் கிடையாது—என்பதே கோவிந்தராஜருடைய கொள்கையாக முடிந்திட்டது.

4. தீர்த்தீயம், திலகம் என்கிற வியாக்யானங்களில் இதைப்பற்றின விமர்சம் காணவில்லை. ஆனால் அந்த வியாக்கியானப் பதிப்பில் (ஸ) என்று குறிப்பிட்டவொரு வியாக்யான ஸங்க்ரஹப்பகுதியில் விமர்சம் காண்கிறது. * ஏகவசநம் ஆர்ஷமிதி நாகோஜி பட்டாதய: * என்று எழுதப்பட்டிருக்கிறது. (இதற்குமேல் 'வஸ்துதஸ்து' என்று தொடங்கி ஏகவசநோபபத்தியும் காட்டப்பட்டுள்ளது; அதைப்பற்றி முடிவில் தெரியவரும்.) "ஏகவசநம் ஆர்ஷமிதி நாகோஜிபட்டாதய:" என்று கோவிந்தராஜீயத்திற்குச் சார்பாகவே எழுதப்பட்டுள்ளதை விமர்சிப்போம். நாகோஜிபட்டரென்பவர் மஹாவையாகரண கோஷ்டியில் மிகப்ரஸித்தர்; ப்ரதமபரிகணிதர். அவர் ஸ்ரீராமாயணவியாக்கியானம் செய்ததாகத் தெரியவில்லை, செய்திருக்கவுமில்லை. அவர் "ஏகவசநம் ஆர்ஷம்" என்று எவ்விடத்திலெழுதியுள்ளாரென்பதை ஆராய வேண்டும். அவர் தாமெழுதின வியாகரண க்ரந்தங்களில் ரோதஸீதத்வவிசாரம் செய்ய நேர்ந்து அங்கே ப்ராஸங்கிகமாக இது எழுதியிருக்கக்கூடும். ரோதஸீ என்பது த்விவசநாந்தமேயொழிய ஏகவசநாந்தமன்று என்பதை நாகோஜிபட்டர் கல்வெட்டாக்கியிருக்கிறாரென்பது அசைக்கமுடியாமல் தேறிநிற்கிறது. நாகோஜிபட்டரோடு நிறுத்தாமல் ஆதிசப்தப்ரயோகம் பண்ணியிருக்கையாலே, அவரைப்போன்ற மற்றும் பல வையாகரணர்களும் அவரது கொள்கையையே ஆதரித்திருக்கிறார்களென்பது அறியவெளிது. ஏவஞ்ச, மஹாவையாகரண ஸரணியில் ரோதஸீ—த்விவசநாந்தமேயொழிய ஏகவசநாந்தமன்று என்று திண்ணமாகத் தேறி நின்றது.

5. ஸகாராந்தமான ரோதச்சப்தமுண்டேயொழிய ஈகாராந்தமான ரோதஸீ சப்தம் கிடையாதென்று ஸித்தாந்தம் செய்வதற்கு ஸுப்ரஸித்தமஹாகவிகளின் பல ப்ரயோகங்கள் கைகொடுக்கின்றன. மாககாவ்யத்தில் (18—15) * ரோதோரந்த்ராணி * என்றும், சம்பூ ராமாயண பாலகாண்டத்தில் *த்வாரோ ரோதோருதா* என்றும் இப்படி அநேகப்ரயோகங்கள் காண்கின்றன. 'ரோதஸ்' என்பது ப்ரக்ருதியாயிருந்தாலொழிய மேலே காட்டின ப்ரயோகங்கள் பொருந்தமாட்டா. மேலேகுறித்த விடங்களில் மல்லிநாதாதிகளின் வியாக்கியானங்களும் விசதமாகவுள்ளன.

6. இப்படிப்பட்ட ப்ரயோகங்கள் போலே "......ரோதஸீகந்தர:" "பாதாளாயிதரோதஸீபரிகா:" என்றாற்போன்ற ப்ரயோகங்களும் சில காண்கின்றன. அப்ரஸித்தர்களும் அதி ப்ரஸித்தர்களுமான ஸாமாந்ய கவிகளின் ப்ரயோகமிருந்தாலென்ன? என்று சிலர் உதறித் தள்ளுவர்கள். அது நமக்கு யுக்தமாகத் தோன்றவில்லை. அதைப்பற்றியும் ஆராய்ச்சி செய்வதே நலமென்று நமக்குத் தோன்றினபடியால் விசேஷித்து நாம் இதில் செய்த ஆராய்ச்சியில் நமக்குக்கிடைத்த ப்ரமாண விசேஷங்களை யெல்லாம் வரிசையாக விளக்குகிறோம்.

7. ரோதஸீ என்பது வைதிக சப்தம். இதனை லோகத்திலும் ப்ரயோகித்துவருவது தவறன்று. அமரகோசத்தில் அக்னிபர்யாய நாமங்களில் ஆசுசுக்ஷணி: என்கிற விதுவும் படிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்தில் ஸுதாகாராதிகள் "இது வைதிக சப்தமாயிருக்கச் செய்தேயும் லோகத்திலும் ப்ரயோகிக்கக் குறையில்லை" என்கிறார்கள். "சாந்தஸாநாமபி க்வசித் பாஷாயாம் ப்ரயோக:" என்பது அவ்விடத்து ஸுதாபங்க்தி. க்ஷீரஸ்வாமி ப்ரப்ருதிகளும் இங்ஙனே பல விடங்களிலெழுதியுள்ளார்கள். மஹாவையாகரணர்கள் ரோதஸீ என்பதை வைதிக சப்தமாகவே நிரூபித்துள்ளார்கள்.

8. * [illegible] * * [illegible] * (3-2-106, 107) என்கிற பாணிநி ஸூத்ரங்களின் மஹாபாஷ்யத்தில் * [illegible] ரோதஸீ * என்கிற வேதவாக்யம் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இது யாம் அத்யயநம் செய்த க்ருஷ்ணயஜுர்வேதத்தில் இல்லாமையால் வேறு எந்த வேதத்திலுள்ளதென்று விசாரிக்க நேர்ந்தது. விசாரித்ததில் பலபல விசேஷங்கள் தெரிந்துகொள்ள ப்ராப்தமாயிற்று. அவ்வளவையும் விரிவுக்கு அஞ்சாமல் எழுதுவோம். மேலே குறித்த மஹாபாஷ்ய ஸ்தலத்தில்தான் ரோதஸீ என்பதை வைதிக சப்தமாக மஹாவையாகரணர்கள் நிரூபித்துள்ளார்களென்பது குறிக்கொள்ளத்தக்கது.

9. ரோதஸீ என்பது நமது க்ருஷ்ணயஜுர்வேதத்தில் ஏழெட்டிடங்களில் வருகிறது. ஓரிடம் தப்பாமல் எல்லா விடங்களிலும் இது த்விவசநாந்தமாகவே ஓதப்பட்டு வருகின்றது. ஈகாராந்தமாயும் ஊகாராந்தமாயும் ஏகாராந்தமாயுமுள்ள பதங்கள் த்விவசநாந்தமாகவுள்ள விடங்களை வேதத்தில் ஸ்பஷ்டமாகக் காட்டுவதற்கு ஒரு உபாயம் அநாதியாகவே ஏற்பட்டிருக்கிறது. அதாவது, இதி என்று சேர்த்து ஓதுவது. ப்ரக்ருதத்தில் 'ரோதஸீ இதி ரோதஸீ, என்றே எங்கும் ஸமகண்டமாக ஓதப்பட்டு வருவதால் இது த்விவசநாந்தமே யென்பது நிர்விவாதம்.

10. ஸதநே என்றொரு பதத்தை யெடுத்துக்கொள்வோம்; இது ஸப்தம்யேகவசநாந்தமாகவும் ப்ரதமாத்விதீயாத்விவசநாந்தமாகவும் வரக்கூடியது. இவ்விரண்டு விதமாகவும் இது வேதத்தில் வருகிறது. ஸப்தமியானவிடத்தில் 'ஸதநே' என்று மாத்திரம் ஓதப்படும். த்விவசநமான விடத்தில் 'ஸதநே இதிஸதநே' என்று ஓதப்படும். இதற்கு ப்ரக்ரஹபாடமென்று

பெயர். இப்படி ஒன்றல்ல இரண்டல்ல; ஆயிரக்கணக்கான பதங்களுண்டென்பதை வைதிகர்களறிவார்கள்.

11. மஹாபாஷ்யகாரர் எடுத்துக்காட்டின ரோதஸீ விஷயமானவாக்யம் ருக்வேதத்தில் வருவதால் தகுந்த துணையுடன் அந்த வேதத்தில் ஆழ்ந்து புகுந்து ஆராய்ச்சி செய்ததில் யாம் நன்கு உணர்ந்த விஷயங்களிவை காணீர்; ருக்வேதத்திற்குள் ரோதஸீ என்பது இருநூற்று மூன்று (203) தடவை வருகிறது. இது யஜுர்வேதத்தில் ஒரேவிதமாக வருவதுபோலல்லாமல் ருக்வேதத்தில் நான்குவிதமாக வருகிறது. அந்த நான்கு விதங்களாவன:—

(1) ஸர்வாநுதாத்தஸ்வரமான விதம். (2) ஆத்யுதாத்தஸ்வரமான விதம்.
(3) அந்தோதாத்தஸ்வரமான விதம்.

இம்மூன்று வகைகளிலும் இப்பதம் த்விவசநமேயொழிய ஏகவசநமன்று.

(4) ஏகவசநமாக வருவதுதான் நான்காவது வகை.

அது அந்தோதாத்தஸ்வரமாயிருந்து கொண்டு ஏகவசநமாக நான்கிடங்களில் வருகிறது. (ஆனால் அந்த நான்கிடங்களில் மாத்திரம் பொருள் வேறுபட்டதேன்பதே சிறப்பான விஷயம் )

| | | |
|---|---|---|
| 1. | ஸர்வாநுதாத்த த்விவசநாந்தமாக வருமிடங்கள் | 19 |
| 2. | ஆத்யுதாத்த த்விவசநாந்தமாக வருமிடங்கள் | 178 |
| 3. | அந்தோதாத்த த்விவசநாந்தமாக வருமிடங்கள் | 2 |
| 4. | அந்தோதாத்த ஏகவசனமாக வருமிடங்கள் | 4 |
| | ஆக இடங்கள் | 203 |

12. இவ்விரு நூற்று மூன்றிடங்களுள் 199. இடங்கள் நிஸ்ஸந்தேஹமாக [ரோதஸீ இதி ரோதஸீ] என்று ப்ரக்ரஹமோதப்படுமிடங்கள். த்விவசநஸ்தலங்களென்றபடி.. நான்கு இடங்கள் மாத்திரம் அப்படியல்லாமல் ஏகவசநாந்தமாய் ரோதஸீ என்று மாத்திரமோதப்படுமிடங்கள். இப்படி நாம் காட்டினதைக் கண்டவுடனே சிலர் என்ன நினைக்கக் கூடுமென்றால், ரோதஸீ என்பதற்கு த்விவசநாந்தத்வம் போலே ஏகவசநாந்தத்வமுமுள்ளதுதானென்றும், அப்போது கௌரீ சப்தம் போல் கொள்ளத்தக்கது தானென்றும் நினைக்கக்கூடும். இப்படி நினைப்பதில் யாதொருதடையுமில்லை. ஆனால், ரோதஸீ இதி ரோதஸீ என்று ஓதப்படுகிற 199 இடங்களிலும் த்யாவாப்ருதிவ்யௌ என்றே அர்த்தமெழுதியிருக்கின்ற வித்யாரண்ய ஸ்வாமிகள், அந்த நான்கிடங்களில் என்ன எழுதியிருக்கிறாரென்பதைத் தான் கண்ணுடையார் காணவேணும்.

## இப்போது நாமெழுதுமிவ்விடந்தான் இந்நூலுக்கு உயிரான இடம்.

13. 1890 ஆம் வருஷத்தில் திவ்யமான தேவநாகரலிபியில் லண்டனில் மிகப்பெரிய நான்கு ஸம்புடங்களாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளதாய், பதபாடத்தோடும் ஸாயணாசார்ய பாஷ்யத்தோடுங் கூடியதான ருக்வேதத்தை நாம் நூறு ரூபாய் கொடுத்து வாங்கியிருந்தது இப்போது தான் ஸபலமாயிற்று. மேலேகுறித்த 203 இடங்களிலும் பத பாடத்தையும் பாஷ்யத்தையும் நாம் கட்கூடாகக் கண்டு இஃதெழுதுகின்றோம். 199 இடங்களில் ரோதஸீ என்பதற்கு 'த்யாவாப்ருதிவ்யௌ' என்று பாஷ்யமிட்டவர் த்விவசநபாட மில்லாத நான்கிடங்களில் அப்பொருளைவிட்டு வேறு பொருளே பணித்தார் ;— எங்ஙனே யென்னில்;

## 14. முதல் இடம்.

[மண்டலம் 1, ஸூக்தம் 167, மந்த்ரம் 5. முதல் ஸம்புடத்தில் பக்கம் 731-ல்] * ரோதஸீ நரஜணா: * என்றுள்ளது. இங்கு ரோதஸீ இதிரோதஸீ என்று ப்ரக்ரஹ பாடம் கிடையாது. ஆகவே ஏகவசனமே. இங்கு பாஷ்யம்* ரோதஸீ ... * என்று.

## 15. இரண்டாவது இடம்.

[மண்டலம் 5, ஸூக்தம் 56, மந்த்ரம் 8. இரண்டாவது ஸம்புடத்தில் பக்கம் 628-ல்] * ... * என்று தொடங்கும் மந்த்ரத்தில் * ... ரோதஸீ * என்பது முடிவு. இங்கும் * ரோதஸீ இதிரோதஸீ * என்கிற ப்ரக்ரஹபாடம் கிடையாது. ஆகவே இதுவும் ஏகவசநம். இங்கு பாஷ்யம்— ரோதஸீ— ... என்றுள்ளது.

## 16. மூன்றுவது இடம்.

[மண்டலம் 6, ஸூக்தம் 50, மந்த்ரம் 5. இரண்டாவது ஸம்புடத்தில் பக்கம் 829-ல்] * ... ரோதஸீ ... * என்று மந்த்ராரம்பம். இங்கும் ரோதஸீ இதி ரோதஸீ என்கிற ப்ரக்ரஹ பாடம் கிடையாது. ஆகவே இங்கும் ஏகவசநமே. இங்கு பாஷ்யம் ரோதஸீ— ...; ... என்றுள்ளது.

## 17. நான்காவது இடம்.

[மண்டலம் 6, ஸூக்தம் 66, மந்த்ரம் 6- இரண்டாவது ஸம்புடத்தில் பக்கம் 87-ல்] * ... ரோதஸீ ... * என்று மந்த்ரம். இங்கும் ரோதஸீ இதி ரோதஸீ என்கிற ப்ரக்ரஹபாடம் கிடையாது- ஆகவே இங்கும் ஏகவசநமே. இங்கு பாஷ்யம்— * ரோதஸீ— ... * என்றுள்ளது.

## (விசேஷ கவனிப்பு.)

18. இதற்கு அடுத்த மந்த்ரத்தில் (6-66-7.) * ... ரோதஸீ ... * என்று வருகிறது. அங்கு ரோதஸீ இதி ரோதஸீ என்று ப்ரக்ரஹபாடம் தாராளமாக வுண்டு. அங்கு * ரோதஸீ— ... * என்றே பாஷ்யமுள்ளது. இதனல் பாஷ்யகாரர் மிகவும் அவஹிதராய் பாஷ்யம் செய்கிறுரென்பது தெரியவரும்.

19. ஆக இவ்வளவு நிரூபணங்களினல் என்ன தேறிற்றென்னில்; சௌரீ நாரீ ராக்ஷஸீ இத்யாதிகள் போலே ரோதஸீ என்றும் ஒரு சப்த ஸ்வரூபமுண்டு. ஆனல் அதற்கு ஒரு ஸ்த்ரீவ்யக்தி அர்த்தமேயொழிய த்யாவாப்ருதிவிகள் அர்த்தமல்ல என்பது கல்வெட்டாயிற்று.

20. பாஷ்யகாரரான ஸாயணசார்யர் ஓரிடத்தில் மற்றொரு விசாரமும் காட்டியுள்ளார்; அதுவும் குறிக்கொள்ளத்தக்கது. [மண்டலம் 1, ஸூக்தம் 167, மந்த்ரம் 4. முதல் ஸம்புடத்தில் பக்கம் 731-ல்] * ந ரோதஸீ ... * என வருமிடத்தில் ரோதஸீ இதி ரோதஸீ என்று ப்ரக்ரஹபாடமுண்டு- ஆகவே இது த்விவசநமென்று அறியக்கூடியது. இங்கு கிரமமாக த்யாவாப்ருதிவ்யௌ என்று அர்த்த மெழுதி முடித்துவிட்டு, உடனே சில பங்க்திகள் எழுதியுள்ளார்; விமர்சந விசக்ஷணர்கள் அந்த பங்க்திகளையும் சேர்த்து விமர்சிப்பது. அங்கு நாம் தெரிவிக்கவேண்டிய விசேஷ விஷயங்களை அடுத்த க்ரந்தத்தில் ஆமரத் தெரி

விப்போம், இங்கு ஸம்க்ஷேபமாகத் தெரிவிப்பதாவது, த்யாவாபூமீ என்கிற அர்த்தம் தவிர வேறு அர்த்தத்தில் தான் ரோதஸீ என்பது ஸ்த்ரீலிங்கமாக நிஷ்பந்நமாகிறதென்று பாஷ்யகாரர் அங்கு ஸுவ்யக்தமாகக் காட்டியுள்ளார். அதை செவ்வனே க்ரஹிக்க கில்லாதவர்கள் ஸ்த்ரீலிங்கமாகவும் ரோதஸீ சப்தமுண்டென்றும் அதற்கும் த்யாவாபூமிகளென்றே அர்த்த மென்றும் மருள் கொள்ளத் தலைப்பட்டார்கள். அந்த மருளே சிலருடைய அபப்ரயோகத்திற்கு மூலமாயிற்று.

21. ரோதஸீ ரோதஸ்யௌ ரோதஸ்ய: என்னும் ப்ரக்ரியை யுக்தமாகுமானல் அமரஸிம்ஹன். ரோதஸீ என்பதோடு கூட ரோதஸ்யௌ என்பதையும் படித்திருப்பது கூடவே கூடாது. கௌர்யௌ, நார்யௌ, ராக்ஷஸ்யௌ என்பவற்றைப் படித்திருக்கிருரோ? இல்லையே. அதுபோலவே ரோதஸீ என்று படித்ததோடு நின்றிருக்க வேண்டும். **ரோதஸ்யௌ** என்றும் ஏன் படித்திருக்கிரு ரென்னில்; வேதத்தில் ரோதஸீ என்று காண்பது போலவே **ரோதஸ்யௌ** என்றும் **ரோதஸ்யோ:** என்றும் சிறுபான்மை காண்கையாலே ஈகாராந்தத்திலும் த்விவசநாந்தமாக வுண்டென்று கொண்டு படித்தாரென்பதே பரமார்த்தம். **ரோதஸ்யௌ** என்கிறபதம் ப்ராமாணிகமாகில் அது ஈகாராந்த சப்தமாகவே யிருக்கவேண்டுமாதலால் ரோதஸீ என்பது இங்கு ப்ரக்ருதியாகிறபடியால், அந்த ப்ரக்ருதியை ஸமாஸ பதங்களில் ப்ரயோகிக்கலா மாகையினலே ‘பாதாலாயித ரோதஸீபரிகர:’ இத்யாதி ப்ரயோகங்கள் ஸாதுவாகலாமே யென்னில்; ஸூத்ராவயோ:. இது வைதிக சப்தமென்று முதலிலேயே தெரிவித்தோம். வேதங்களில் [ரோதஸீ இதிரோதஸீ] என்பதே பெரும்பாலும் ஓதப்பட்டு வருவதாலும், ரோதஸ்யௌ என்பது சிறுபான்மையே வருவதாலும் மஹா கவிகள் யாவரும் ரோதஸ்யௌ என்கிற த்விவசநாந்த பதத்தைக் கொள்ளாமல் ரோதஸீ என்கிற த்விவசநாந்த பதத்தையே கொண்டு ரோதோப்யா, ரோதோரந்த்ராணி இத்யாதி அநேக ப்ரயோகங்களைப் பண்ணியிருக்கின்ருர்கள். ஸுப்ரஸித்த மஹாகவி ப்ரயோகங்களில் * வ்யாப்ய ஸ்திதம் **ரோதஸீ** * இத்யாதி ப்ரயோகம்போலே **ரோதஸ்யௌ** என்கிற ப்ரயோகமும் கிடைக்குமானல் நன்றே. அப்போதும், கௌரீ கௌர்யௌ கௌர்ய: என்பதுபோலே ரோதஸீ, ரோதஸ்யௌ, ரோதஸ்ய: என்று சப்தப்ரக்ரியை சொல்லுவதற்கு அவகாசமே கிடையாது—என்கிற நிரூபணமே இந்நூலின் ஸர்வஸ்வம்.

22. இன்னமும் வக்தவ்யங்களெல்லாம் இதற்கு மூலமான ஸம்ஸ்க்ருதநூலிலே விரியச் சொன்னேம். அதுதன்னிலே கண்டு கொள்வது.

[illegible] ।
[illegible] ॥

**ரோதஸீ தத்வ போதநி முற்றிற்று.**

---

## அபூர்வ க்ரந்த விளம்பரம்.

# ஸ்ரீ வைஷ்ணவலக்ஷணம்

ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணத்தை விளக்கவந்த சாஸ்த்ரங்கள் பலவும் பலமுகமாகப் பேசியுள்ளன. "யே கண்டலக்நதுலஸீநளிநாக்ஷ மாலா: யே பாஹுமூலபரிசிஹ்நிதசங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ரா : தே வைஷ்ணவா புவநம் ஆசு பவித்ரயந்தி." என்கிற சுலோகம் பெரும்பாலும் பலருமறிந்ததேயாகும். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இருக்க வேண்டிய வெளிவேஷங்களை மாத்திரம் இந்தச்லோகம் தெரிவிக்கின்றதேயன்றி அந்த:கரணத்தில் இருக்கவேண்டிய அம்சங்களில் ஏகதேசத்தையும் தெரிவிக்கவில்லை. அவற்றைத் தெரிவிக்கின்ற ச்லோகங்களும் இதிஹாஸ புராணங்களில் மிக மலிந்துகிடக்கின்றன.

பகவத்கீதையில் பத்தாவது அத்யாயத்தில் (ச்லோ. 5) "அஹிம்ஸா ஸமதா" என்றவிடத்தில் ஸமதா என்பதை விவரித்தருளா நின்ற நமது பாஷ்யகாரர். ": ஸமதா—ஆத்மநி ஸுஹ்ருத்ஸு விபக்ஷேஷு ச ஸமமதித்வம்" என்று உரைத்தருளினார். அங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகன் * ஸமமதிராத்ம ஸுஹ்ருத்விபக்ஷபக்ஷே — இதி பகவத்பராசரவசந மிஹ தத்தத்பதை : ஸ்மாரிதம் * என்றருளிச்செய்தார்.

ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் (3-7-20) * நசலதி நிஜவர்ணதர்மதோ ய: ஸமமதி ராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே, நஹரதி நச ஹந்தி கிஞ்சிதுச்சை : ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணு பக்தம் * என்றுள்ள சுலோக ரத்நமே இங்கு எடுத்துக் காட்டப்பட்டதாயிற்று. இதில் * ஸமமதிராத்மஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே * என்கிற இரண்டாவது பாதம் முக்கியமாகக் கணிசிக்கத்தக்கது. தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன் பக்கலில் பகைபாராட்டுமவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியை யுடையவனாயிருப்பவன் எவனோ அவனே ஸ்ரீவைஷ்ணவன் என்று இதனால் தெரிவிக்கப்படுகின்றது.

இப்படிப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவத்வம் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாரிடத்தில் இருந்ததாகக் கதைகளில் கேட்டுவருகின்றோ மத்தனையல்லது இக்காலத்தில் சில வ்யக்திகளிடத்திலாவது இதைக் காண முடியுமோ என்று பார்த்தால் முடியாதென்றே முடிவுகட்டவேண்டியதாகும்.

முற்காலத்தில் பட்டர் நம்பிள்ளை போல்வாருடைய சில இதிஹாஸங்களை நாம் கேட்கும்போதும் புத்தகங்களில் வாசிக்கும் போதும் 'உண்மையாக இங்ஙனே நடந்திருக்குமோ!' என்று அதிசங்கிக்குமவர்களாக நாம் இருக்கின்றோமே தவிர, 'நாமும் அந்த நடையைச் சிறிதாகிலும் அநுகரிக்க முயலவேண்டும்' என்று பாரிக்கிற அதிகாரிகள் இலரென்றே சொல்லவேண்டும்.

ஸ்ரீவசந பூஷணத்தில் "குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" என்ற விடத்து ஜநந்யா சார்யருடைய வியாக்கியானமான ஆய்ப்படியில்—

"பட்டர் ஒருநாள் பெருமாள் ஸந்நிதியிலே அநுஸந்தானம் பண்ணுகிற்க, சிலர் செவி பொறுக்கவொண்ணாத பருஷோக்தி பண்ணக் கேட்டு, சாத்தின திருவாழிமோதிரத்தையும் திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப்பார்த்து, இவர்கள் பருஷித்ததுக்கு நான்

அஞ்சிக் கொடுத்தேனென்று ; நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப் பற்றக் கொடுத்தேனத்தனை.........என்றருளிச் செய்தார்'' என்று காண்கிறது. பட்டர் தம்மை தூஷித்தவர்களுக்கு பூஷண தானமும் பீதாம்பர தானமும் செய்தருளினதாக இங்ஙனே இதிஹாஸம் காண்கிறோம். இதை யெல்லாம் நாம் பிறர்க்கு எடுத்துரைக்கும்போது கல்லும் கரையும்படி உரைக்கின்றோம் ; கேட்பவர்களும் கண்ணும் கண்ணீருமாயிருந்து புளகாஞ்சிதராய்க் கேட்கிறார்கள். ஆனால் அவரவர்களுடைய அநுஷ்டானம் எங்ஙனே யிராநின்றதென்று பார்த்தால் வாய்திறக்க வழியேயில்லை.

நமக்கு நைச்யாநுஸந்தானம் ஸ்வரூபம் என்றறிந்து நாம் "நீசனேன் நிறையொன்றுமிலேன்'' என்றும் "சீலமில்லாச் சிறியன்'' என்றும் பலவாறு பாசுரங்களையும் ச்லோகங்களையும் முன்னிட்டுத் தாழ்வு சொல்லிக்கொள்ளுகிறோம். நம் வாயினால் வெளி வந்த அந்தத் தாழ்வு தன்னையே பிறரொருவர் நம்மை நோக்கி எடுத்துரைக்கத் தொடங்கினால் 'என்னையா நீச னென்கிறாய் ? என்னையா நிறையொன்றுமில்லாதவனென்கிறாய் ? என்னையா சீலமில்லாச் சிறியனென்கிறாய் ? பாவீ ! நீயன்றோ இப்படிப்பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரம் வகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். ஒவ்வொருவரும் தம்தம் அநுபவத்தில் இதை நிச்சயமாகக்காணலாம்.

சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி 'ஸ்வாமிந் ! ஸ்ரீபாத தீர்த்தம் ஸாதிக்கவேணும்' என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் ''ஐயோ ! அடியேனுக்கென்ன யோக்யதை யுண்டு ? ஸகல விதத்திலும் அயோக்யனன்றோ அடியேன்' என்று பலபடியாக நிகர்ஷாநுஸந்தானம் பண்ணுகிறார்கள். இந்த அநுஸந்தானம் உள்ளவாறு செய்கிறபடியா ? அல்லது இங்ஙனே சொல்லிக்கொள்ள வேண்டுவது ஒரு உபசார வழக்கு என்று கொண்டு செய்கிறபடியா ? என்று நாம் ஆலோசித்தால், அவர்களுடைய ஹ்ருதயத்தை நம்மால் தெரிந்து கொள்ளமுடியாதாயினும், அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத்தன்மையை நம் வாயினால் சொல்லிக்காட்டின விடத்தும், (அதாவது நீர் மிகவும் அயோக்யர் என்று பிறர் சொன்ன விடத்திலும்) அவர்கள் உகந்தேயிருப்பார்களாயின் அப்போதுதான் அவர்களுடைய நைச்யாநுஸந்தானத்தை நாம் ஸஹ்ருதயமென்று நினைக்கலாகும்.

'அஹம் அமர்யாத:, அஹம் க்ஷுத்ர:' என்று நைச்யாநுஸந்தானம் பண்ணுமவர்கள் "த்வம் அமர்யாத:, த்வம் க்ஷுத்ர:'' என்கிற பரோக்திகளை உகந்திருக்கின்றார்களா? என்றே நாம் பார்க்கவேண்டும். கூரத்தாழ்வான் போல்வாரான சிலரே அங்ஙனமிருந்தார்கள் என்றே சொல்லவேண்டியதாகின்றது. தம்மைப்பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷோக்திகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக ப்ரதிஸத்காரம் செய்யப்புறப்படுமவர்கள் தாங்கள் செய்து கொள்ளும் நிகர்ஷாநுஸந்தானம் அர்த்தமற்றது என்றே சொல்லவேண்டும்.

"ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு'' என்று பிரஸங்க மேடைகளில் பேசுவாரை மிக மிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை ஒருவர் அடிப்பதாகக் கை யோங்கும்போதே என்ன நடக்கிறதென்பதையும் காணா நின்றோம்.

ஸபைகளில் சிலர் உபந்யாஸம் பண்ணி முடிக்கும்போது "ஒன்றுமறியாத நான் ஏதோ தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்; இதில் நல்லது ஒன்றுகூட இராது; சிறியேனை க்ஷமிக்கவேணும்'' என்று கால்மணிகாலம் சொல்லி முடிப்பர்கள். இதே வார்த்தையை அவர் அயலார் வாயில் கேட்பாராகில், கோபாவேசங் கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று

" எனக்கொன்றும் தெரியாது, நானு தப்பும் தவறுமாக உளறிவிட்டேன் " என்று ஆரம்பித்து (அவரே) பிரபலமாக அட்டஹாஸங்களைச் செய்யக் காண்கின்றோம். ஆசார்ய பீடம் வஹிக்கின்ற எந்த வ்யக்தியும் தம் நிகர்ஷத்தைத் தாம் அநுஸந்திக்கிறவர்களாக இருக்கின்றார்களே யல்லது, தம்மைப்பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷத்தை ஆமோதிப்பவர்களாக இல்லையே! அப்படிப் பட்டவர்களன்றோ ஸ்ரீ வைஷ்ணவத்வ பூர்த்தி யுடையவராவார்.

இக்காலத்தில் இப்படிப்பட்ட வ்யக்தி தேறுவது கஷ்டமாதலால் ஒருவரும் ஸ்ரீ வைஷ்ணவரல்லர் என்று நாம் சொல்லவும் நினைக்கவும் தகாது. * ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாத் ஜாதத்வம் ப்ராஹ்மண்யம் * [ப்ராஹ்மண யோநியில் பிறப்பதே ப்ராஹ்மண்யம்] என்று சொல்லுவதுபோல, * வைஷ்ணவ்யாம் வைஷ்ணவாத் ஜாதத்வம் வைஷ்ணவத்வம் * [வைஷ்ணவ யோனியில் பிறப்பதே ஸ்ரீவைஷ்ணவத்வம்] என்று சொல்ல ப்ராப்தமாகிறது.

அப்படிப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவர்களுடையவும் திருவுள்ளம் புண்படாதபடி வர்த்திக்க வேண்டியது நமது கடமையே யாகும். ஒரு வைஷ்ணவருடைய திருவுள்ளம் கன்றினால் அதிற்காட்டிலும் அநர்த்தபீஜம் நமக்கு வேறில்லை என்கிற துணிவு பிறக்கவேணும்.

---



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. மைஸூர் மஹாராஜகுரு.
ஸ்ரீ லக்ஷ்மீஹயவதந பாதுகாஸேவக
**ஸ்ரீமதபிநவ ரங்கநாத ப்ரஹ்மதந்த்ர பரகால மஹாதேசிகன்.**
**(வர்த்தமான ஸ்வாமி.)**

# வடக்குத் திருவீதிப்பிள்ளை வைபவம்.

ஆனிமாதத்தில் பெரியாழ்வாருடைய திருவவதார நன்னாளாகிய ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் இப்பேராசிரியர் திருவவதரித்தருளினார். ஸ்ரீ வசனபூஷணம் முமுக்ஷுப்படி முதலிய அஷ்டாதச ரஹஸ்யங்களையருளிச் செய்த பிள்ளைலோகாசாரியர்க்கும், ஆசார்யஹ்ருதயமருளிச் செய்த அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்க்கும் திருத்தந்தையார் இவர். இவருடைய நிஜநாமதேயம் ஸ்ரீக்ருஷ்ணமஹாகுரு வென்பதாம். இந்தத் திருநாமமே பெரியவாச்சான்பிள்ளை யென்கிற மற்றோராசிரியர்க்கும் இருந்ததனால் நம்பிள்ளை திருவடிகளில் ஆச்ரயித்திருந்த விவர்களுக்கு வாசி தெரிவதற்காக இவர் வடக்குத் திருவீதிப்பிள்ளையெனவழங்கப் பட்டு வந்தார். திருவரங்கம் பெரியகோயிலில் வடக்குத் திருவீதியில் இவர் வாழ்ந்து வந்ததுவே இத்திருநாமத்திற்குக் காரணம். *ஸ்ரீக்ருஷ்ண பாத பாதாப்ஜே நமாமி சிரஸா ஸதா, யத்ப்ரஸாத ப்ரபாவேந ஸர்வஸித்திரபூந் மம* என்பது இவருடைய தனியன்.

இப்பேராசிரியருடைய திவ்யசரித்திரங்களைப் பற்றி முன்னோர்கள் விசேஷமாக எழுதிவைக்கவில்லை யாதலால் இவருடைய ஞானப்பெருமைகளை இங்கு விசேஷமாக அநுபவிப்போம். பகவத்விஷயமென வழங்கப்படுகிற [திருவாய்மொழிவியாக்கியானமான] ஈடுமுப்பத்தாறுயிரப் படியை இவ்வாசிரியரே பட்டோலை கொண்டவர். உபதேசரத்தினமாலையில் *தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை, இந்த நாடறிய மாறன் மறைப் பொருளை நன்குரைத்தது, ஈடுமுப்பத்தாறுயிரம்* என்றருளிய பாசுரத்தின்படி, நம்பிள்ளையின் பகவத் விஷயோபந்யாஸங்களைக் கேட்டுத் திருவுள்ளத்தில் தரித்துக்கொண்டிருந்து அற்புதமாகப் பட்டோலை கொண்ட பெருமை இவ்வாசிரியர்க்கு அஸாதாரணமானது. சிலர் கூறுவதாவது, நம்பிள்ளை சோதிவாய் திறந்து அருளிய பங்க்திகள் எப்படியோ அப்படியே அப்பங்க்திகளே ஈட்டில் அமைக்கப்பட்டன வென்று. இதில் ஔசித்யம் சிறிதுமில்லை. வாசிகவ்யவஹார நடை வேறு; க்ராந்திகசைலி வேறு. கங்காப்ரவாஹம் போல் நம்பிள்ளையருளிச் செய்தவையாய், கரைகட்டாக்காவேரி யென்னும் படியாயமைந்த ஸ்ரீ ஸூக்திகள் அப்படியே ஏடுபடுத்தப்பட முடியாதவை. மஹோபந்யாஸங்களில் குறிப்பெடுத்துக் கொள்ளும் முறையில் அமைந்தது ஈடு. ஈட்டின் பங்க்திஸந்நிவேசம் வேறு எந்த க்ரந்தத்திலும் கண்டறியாததும் காண முடியாததுமான அத்விதீய விலக்ஷண ஸந்தர்ப்பம். ஸம்ஸ்க்ருத வித்வான்களும் தமிழ்வித்வான்களும் தனித்தனியே உள்குழையத்தக்க உயர்ந்த ரசநாவிசேஷம்.* ககநம் ககநாகாரம் ஸாகரஸ் ஸாகரோபம:* என்கிறாப் போலே "ஈட்டுக்குவமை ஈடே" என்னவேண்டுமத்தனை. மணிப்ரவாள நடையில் மற்றும் பல வாசிரியர்களெழுதியுள்ளார்களெனினும், இவருடைய ரசநாவைகரி தேனும்பாலும் நெய்யும் கன்னலு மமுதுமொத்து விளங்குமழகு அநுபவ ரஸிகர்களுக்கே அறிய வெளிது. அர்த்தம் தெரியாமற்போனாலும் பங்க்திஸந்நிவேசத்தை ஸேவித்தமாத்திரத்திலே இரும்புபோல் வலிய நெஞ்சும் இறையிறையுருகும். பெரிய புலவர்கள் பத்தெட்டு வரிகளில் எழுதவேண்டிய பொருள்களை ஒரு வரியில் வெகு கம்பீரமாக அடக்கி யெழுதுந்திறன் இவ்வாசிரியர்க்கே அமைந்தது.

மணவாளமாமுனிகள் இவ்வாசிரியர்க்கு வள்ளல் என்று விசேஷணமிட்டருளினார். [உதாரர் என்றபடி.] ஔதார்யம் மிக்கவர்கள் உலகில் பலர் புகழ் பெற்றிருந்தாலும் இவரொருவருடைய ஔதார்யமே உண்மையில் கொண்டாடத்தக்கதும் ஒப்புயர்வற்றதுமாம். ஏற்கெனவே திருக்குருகைப் பிரான் பிள்ளானருளிச் செய்த ஆறுயிரப்படி வியாக்கியானமும், நஞ்சீய

ரருளிச் செய்த ஒன்பதினாயிரப்படி வியாக்கியானமும் இருந்தாலும் அவை மிகவும் ஸம்க்ஷிப்தங்களாகையாலே அநுபவரஸிகர்களுக்குப் பரிபூர்ணத்ருப்தியை விளைக்கப் போதாதவை. *நம்பிள்ளை தம்முடைய நல்லருளாலேவியிடப் பெரியவாச்சான்பிள்ளையருளிச் செய்த இருபத்தினாலாயிரப்படி வியாக்கியானம் அவைபோலே ஸம்க்ஷிப்தமன்றிக்கே சிறிது விரிவாகவே யிருந்தாலும், ஈடுமுப்பத்தாறாயிரப்படி திருவவதரித்த பின்பு அதுவும் ஸம்க்ஷிப்தமே யென்னும்படி யாயிற்று. அனேகஸ்தலங்களில் இருபத்தினாலாயிரப்படி பங்க்திகளும் ஈட்டுப்பங்க்திகளும் ஒற்றுமைப் பட்டிருக்கையாலே முன்னமவதரித்ததான அந்த வியாக்கியானத்தைத் துணை கொண்டே ஈடு எழுதியருளப்பட்டதெனத் தெரிகின்றது. ஆயினும், ஸ்ரீ ஸூக்தி காம்பீர்யமும் அர்த்த பௌஷ்கல்யமும் ஈட்டுக்கு அஸாதாரணமாயிருப்பது பற்றியே இதுவே என்றும் ஸாலேக்ஷபக்ரந்தமாகக் கொள்ளப்பட்டுக் குலாவப் பெறுகின்றது. ஸ்ரீராமாயணம் முதலிய இதிஹாஸபுராணங்களிலிருந்து மேற் கோளாக ஆங்காங்குப் பலபல ச்லோகங்களை யெடுத்து இனிமையே வடிவெடுத்ததாக வியாக்கியானஞ் செய்தருளுமழகு ஈட்டுக்குச் சிறந்த அணிகலன்.

திருவிருத்தத்திற்கும் இங்ஙனே ஈடுவியாக்கியானம் அமைந்துளது. அஷ்டச்லோகி பெரியபடி வியாக்கியானத்திலே “வடக்குத் திருவீதிப் பிள்ளை அஷ்டாக்ஷரதீபிகையிலே அருளிச் செய்தருளினார்” என்று காண்கையாலே அஷ்டாக்ஷரதீபிகை யென்கிற க்ரந்தமும் இவ்வாசிரியரது க்ருதியென்று தெரியவருகின்றது. (அது லுப்தம்.) இப்பேராசிரியருடைய பெருமைகளில் ஒன்றே நாம் உள்குழைந்து போற்றத்தக்கது; அது யாதெனின்; உலகுக் கெல்லாமுயிரான பிள்ளை லோகாசார்யரையும் அழகியமணவாளப் பெருமாள் நாயனாரையும் பெற்றுக் கொடுத்தருளியதே.

வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## பெரியவாச்சான்பிள்ளை வைபவம்.

ஆவணிமாதத்து ரோஹிணிநக்ஷத்ரத்தில் பூர்வசிகிஸந்ததியில் திருவவதரித்தவர் பெரியவாச்சான் பிள்ளை. இவ்வாசிரியருடைய சரித்திரவரலாறுகளைப் பற்றி விசேஷமாக அறியப் பெறுகின்றிலோம். இவர்தம்மால் உலகுக்குவிளைந்த மஹோபகாரம் அபரிமிதமாதலால் அதைப்பற்றியே சிறிது பேசியுகப்போம். ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்கெல்லாம் மிகச்சிறந்த வியாக்கியானமும், ஸ்ரீ ராமாயணத்தில் பலபலச்லோகங்களுக்கு இன்சுவையே வடிவெடுத்த வியாக்கியானமும் ஸ்தோத்ரரத்நாதி வியாக்கியானங்களும் இவரருளிச் செய்தவை இவருடைய அப்ரதிமமான பாண்டித்யத்தையும் அப்ரமேயமான மேதாப்ரதிபா விலாஸத்தையும் நன்கு புலப்படுத்துகின்றன. வடக்குத் திருவீதிப் பிள்ளையுமிவரும் நம்பிள்ளை திருவடிகளில் ஸப்ரஹ்மசாரிகளாக வாழ்ந்து ஸகலார்த்தங்களையும் ஸம்சயவிபர்யயமறக் கற்றவர்கள். நம்பிள்ளை ஸகலசாஸ்த்ரங்களையும் வரியடைவே அதிகரித்து அந்தப் பாண்டித்யம் முழுவதையும் அருளிச்செயற்பொருளுபந்யாஸங்களிலே உபயோகப்படுத்திவந்தாரென்பது ப்ரஸித்தம். அவ்வண்ணமாகவே இவ்வாசிரியரும் ஸகலசாஸ்த்ரஜ்ஞராகித் தமது ஞானவிளக்கத்தை வியாக்கியானங்களருளிச் செய்வதில் வெகு அழகாகச் செலுத்தி இவ்வுலகுக்கு மஹோபகாரகர்களில் தலைமைஸ்தானம் பெற்றருளினார்.

மதாந்தரஸ்தர்களில் பட்டபாஸ்கரரும் வித்யாரண்யரும் வேதபாஷ்யங்களை விபுலமாக வெழுதிப் புகழ் பெற்றவர்களே. ஆனாலும் அந்த பாஷ்யங்களானவை பெரியவாச்சான்பிள்ளை

வியாக்கியானங்களின் முன்னிலையில் பகல்விளக்கும் மின்மினியுமாயிருக்கும். அந்த வேத பாஷ்யங்கள் சுமை சுமையாக இருந்தாலும் இன்னது சொல்லிற்றென்று ஒருவர்க்கு மறியப் போகாது. மூலத்தில் ரஸமிருந்தாலன்றோ பாஷ்யத்தில் ரஸங்காண முடியும். காடுபரந்த கர்மகாண்டங்கள் கர்மநிஷ்ணுதர்களுக்கும் உபயோகமற்றவையாயுள்ளன. பகவத்குணப்ரசம்ஸை யென்பது ஓரிடத்திலும் அணுமாத்திரமும் காணமுடியாதது. பகவத்குணரஸிகர்களுக்கு அவைகொண்டு பயனொன்று மில்லையே. அப்படியன்றிக்கே த்ராவிடவேத பாஷ்யகாரரான பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீ ஸூக்தி ஒவ்வொன்றும் பகவத்குணநுபவத்தாலல்லது போது போக்கவறியாத முமுக்ஷுக்களுக்கு ரஸாயநமாயிருக்கும். பகவத்விஷயத்தில் சேராமல் பாஹ்யவிஷயங்களைப் பற்றிப் பேசினாலுங் கூட பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் மிகமிக அதிசயிக்கத்தக்கதாயிருக்கும். ஒன்றே இங்கெடுத்துக் காட்டுவோம்.

பெரிய திருமொழியில் திருநறையூர் விஷயமான பாசுரங்களுள் (6-7-4) *மென்மலர் மேல் களியாவண்டு கள்ளுண்ணக் காமர் தென்றல் அலர் தூற்ற, நளிர்வாய்முல்லை முறுவலிக்கும் நறையூர்* என்பது ஒரு பாசுரம். இது சாதாரணமாகச் சோலைகளில் நடக்குஞ் செய்தியைச் சொல்லுவது. வண்டுகள் மதுபானம் பண்ணுவதும் தென்றற்காற்று தூற்றுவதும் முல்லை வாய்திறப்பதுமான ஸம்பவம் சொல்லியிருக்கிறவிது ஸ்வபாவோக்தி. ஆனாலும் இங்குச் சொற் சேர்க்கையமைந்த அழகை நோக்கிப் பெரியவாச்சான் பிள்ளை தமது வியாக்கியானத்தில் அருளிச் செய்திருப்பதாவது,

“[மென் மலர் மேலித்யாதி.] கண்ட விடமெங்கும் பரப்புமாறப் பூத்துக் கிடக்குமிறே; அதிலே மதுபாநார்த்தமாகக் கிட்டின வண்டுகள் அத்தைக் கிட்டப்பெற்ற ஹர்ஷத்தாலே களித்து நிஷித்த ஸேவை பண்ணுவாரைப் போலே மதுபானத்தைப் பண்ணிற்றின. அத்தைக் கண்ட தென்றல் நாட்டிலே பழியைத் தூற்றிற்று. அத்தைக் கண்ட முல்லை, புகுந்த ப்ரமாதத்தையநுஸந்தித்து ‘அதுதான் அப்படி செய்கிறது, இதுதான் இப்படி செய்யக் கடவதோ’ வென்று வாய்விட்டுச் சிரிக்க மாட்டாமை ஸ்மிதம் பண்ணிற்று.” என்று.—இதனை நாமே விவரிப்போம். வண்டு கள்ளுண்ணதாகவும் தென்றல் அலர்தூற்றினதாகவும் முல்லை முறுவலித்ததாகவும் மூலத்திலுள்ளது. ‘அலர் தூற்றுதல்’ என்னுஞ் சொல்லுக்குப் புஷ்பங்களைத் தூற்றுதலென்கிற பொருளே யல்லாமல் பழிதூற்றுதலென்கிற பொருளு முண்டாதலால் அதைக் கொண்டு ச்லேஷோக்தியாக இங்கு வியாக்கியானம் செய்தருளுகிறபடி. வண்டு என்று ஒரு ஸ்ரீ வைஷ்ணவனைச் சொன்னபடியாய், அவன் ஏதோ விதிவசத்தால் கள்ளுண்ண நேர்ந்து விட்டதாம்; அதைக் கண்ட வொருவன், கள்ளுண்டான் கள்ளுண்டானென்று நாட்டிலே பழி தூற்றப்புறப்பட்டானாம்; இவ்விரண்டையுங் கண்ட வொரு சுத்த ஸாத்விகன் ‘ஏதோ விதிவசத்தால் ஒருவன் ஒருகால் மதுபானம் பண்ண நேர்ந்து விட்டால் அதைப்பற்றி இப்படியும் ஒருவன் பழி தூற்றவேணுமோ? இவ்விருள் தருமா ஞாலத்தில் இது ஸஹஜந்தானே யென்று வாளாவிருக்கலாகாதோ வென்று வாய்விட்டுச் சிரிக்கமாட்டாமல் இவையென்ன வுலகியற்கை! என்று புன் சிரிப்புச் செய்கிறானாம். எப்படிப்பட்ட அதிகாரிக்கும் ஒரு நிஷித்த காரியஞ் செய்ய நேர்ந்து விடுவது ஸஹஜமென்றும், அதைப்பற்றி யொருவன் பழி தூற்ற நேருவதும் ஸஹஜமென்றும், ‘இது வொரு ப்ரமாதமா? இதைப் பழிதூற்ற வேணுமா? என்று சில மஹான்கள் நினைப்பது முண்டென்றும் லௌகிக ஸந்நிவேச முணர்த்தியதாக வியாக்கியானங் கண்டது விலக்ஷண மேதாவிலாஸம். இஃது ஒரெடுத்துக் காட்டாக ஈண்டமைக்கப்பட்டது. அத்யாத்ம சாஸ்த்ரார்த்தங்கள் அபரிமிதமாகக் காண்பதோடு இத்தகைய லௌகிக வாக்விந்யாஸங்களும்விபுலமாகக் காணப்படும்பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானங்களில்.

திவ்வியப் பிரபந்தங்களுக்கு வியாக்கியான மிட்டருளுந் திருப்பணியில் மற்றுஞ் சில ஆசாரியர்களும் கைவைத்ததுண்டு. ஆனால் பூர்த்தியாக நாலாயிரத்திற்கும் வியாக்கியானமிட்டருளினவரென்னும் பெருமை இவ்வாசிரிய ரொருவர்க்கே அஸாதாரணமாக அமைந்ததாகும். இவ்விஷயம் உபதேசரத்தினமாலையில்—"பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை, தெள்ளார் வடக்குத்திருவீதிப்பிள்ளை, மணவாள யோகி திருவாய் மொழியைக் காத்த, குணவாளரென்று நெஞ்சே கூறு." "நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்கு மில்லையே, தஞ்சீரால் வையகுருவின் தம்பி மன்னுமணவாள முனி, செய்யுமவைதாமுஞ்சில." "பெரியவாச்சான் பிள்ளை பின் புள்ளவைக்குந் தெரிய, வியாக்கியைகள் செய்வால், அரியவருளிச் செயல் பொருளை ஆரியர்கட்கிப்போது, அருளிச் செயலாய்த்தறிந்து." என்ற பாசுரங்களினாலுமுணரத்தக்கது. பெரியாழ்வார் திருமொழியில் நானூறு பாசுரங்களுக்கு மாத்திரம் இவ்வாசிரியர்தம் வியாக்கியானம் லுப்தமாயிருந்த தென்றும், மணவாள மாமுனிகள் பலருடைய பிரார்த்தனைக் கிணங்கி அக்குறையைத் தாம் நீக்கியருளின ரென்றும் ஸம்ப்ரதாயம் வல்ல பெரியோர் பகர்வர்.

கடல் ரத்நாகர மென்று பெயர் பெற்றிருத்தல்போல இவ்வாசிரியரது வியாக்கியானக் கடல் எண்ணிறந்த விசேஷார்த்த ரத்ன நிதியாகப் புகழ் பெற்றுள்ளதாதலால் அதனையநுபவிப்பதே இவ்வாசார்யருடைய பெருமையநுபவமாகும்.

அர்த்தாத் இங்கொரு முக்கியமான விஷயம் விளக்க வேண்டியதாகிறது. நமது ஸம்ப்ரதாயக்ரந்தங்களில் பெரியவாச்சான் பிள்ளை யென்றும் ஆச்சான்பிள்ளை யென்றும் வ்யபதேச பேதம் காணபதுண்டு. பெரியவாச்சான் பிள்ளையின் ஸமகாலத்தவர்கள் சிலர் இவரை ஆச்சான் பிள்ளை யென்றும் வழங்கியிருந்தாலும் பிற்பட்டவர்களான மணவாளமாமுனிகள் போல்வார் இவரை ஆச்சான்பிள்ளை யென்ற சொல்லால் ஓரிடத்திலும் வழங்கினதில்லை. மணவாளமாமுனிகள் தமது ரஹஸ்யவ்யாக்யாநாதிகளில் ஆச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தியாகப் பலவிடங்களிலும் எடுத்துக் காட்டியுள்ளவை பெரியவாச்சான் பிள்ளையுடையனவேயென்று நாமும் மயங்கியிருந்து பன்னிருதிங்களநுபவம் முதலான சிலநூல்களிலே ஆச்சான் பிள்ளையருளிச் செயலான பரந்த ரஹஸ்யாதிகளையும் பெரியவாச்சான் பிள்ளையருளிச் செயலாக வெழுதியிருந்தோம். பிறகு நிகழ்ந்த விபுலமான ஆராய்ச்சிகளினால் தேறின தெளிவுகளை ஆச்சான்பிள்ளையஷ்டாத்யாயி முதலான விமர்சக்ரந்தமுகேந உலகுக்கு விளக்கியிருக்கிறோம். அவற்றில் நிரூபித்த பலபலஹேதுக்களில் இரண்டு மூன்றை மாத்திரம் இங்கெடுத்துக்காட்டி நிற்போம். பரந்த ரஹஸ்யம் முதலிய ரஹஸ்ய க்ரந்தங்களையும் பெரியவாச்சான் பிள்ளையே விரிவாக அருளிச் செய்திருந்தால், உபதேசரத்தினமாலையில் திவ்யப்பிரபந்த வியாக்கியான விஷயத்தில் பெரியவாச்சான் பிள்ளைக்கு மஹத்தான கௌரவத்தைக் காட்டிவிட்டு ரஹஸ்யார்த்த ப்ரகாசன விஷயத்தில் பிள்ளை லோகாசாரியர்க்கு மஹத்தான பெருமையை விளக்கியிருப்பது விரஸமாகும். ரஹஸ்யார்த்தங்களையும் பெரியவாச்சான் பிள்ளையே ப்ரபஞ்சனம் செய்தருளினா ரென்று ஒரு பாசுரமாவது அவசியம் அருளிச் செய்திருக்க வேண்டும். மாமுனிகள் இதை உபேக்ஷிக்க ப்ரஸக்தியே கிடையாது. ரஹஸ்யார்த்தத்திற்காகப் பெரியவாச்சான் பிள்ளையைப்பற்றி ஒரு பாசுரங்கூட அருளாமையாலும் அதுபற்றிப் பிள்ளை லோகாசாரியர்க்கே ஏழுபாசுரங்கள் அருளிச் செய்திருக்கையாலும் அவ்வுலகாசிரியர்க்குப் பிற்பட்டவரே பரந்தரஹஸ்யாதிக்ரந்தகர்த்தா வென்பது தெளிவாகும். நம்பிள்ளை திருவடிகளில் நேராகக் கேட்டவரும் பலவிதங்களிற் பெருமை பெற்றவருமான பெரியவாச்சான் பிள்ளையே பரந்த ரஹஸ்யாதிகளையருளிச் செய்திருந்தால் அவருடைய கிரந்தங்களை விட்டுப் பிள்ளைலோகாசாரியருடைய முமுக்ஷுப்படி

முதலான க்ரந்தங்களையே எங்கும் யாவரும் காலக்ஷேபக்ரந்தமாகக் கொள்ள ப்ரஸக்தியே யிராது. ஆச்சான் பிள்ளை ஸந்ததியாரென்று சொல்லிக் கொள்பவர்களுங்கூட இற்றைக்கும் நூலைக்கும் பரந்தரஹஸ்யாதிகளின் பெயரையும்கேட்டறியாதவர்களாக வன்றோ உண்மையுள் ரது. அன்றியும், பரந்தரஹஸ்யத்தில் வேதாந்த தேசிகனுடைய சிலவாதங்களுக்கு மறுப்பு -ரைக்கப்பட்டுமிருக்கிறது. பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்திகளை மேற்கோள் காட்டும் வேதாந்த தேசிகன் பெரியவாச்சான் பிள்ளைக்குப் பிற்பட்டவரென்பது நிர்விவாதம். அவருடைய உக்திகளுக்கு விடை கூறுகின்ற பரந்தரஹஸ்யகாரர் பெரியவாச்சான் பிள்ளையாயிருக்கத் தகுதியில்லை. ஆகவே, வேறோராசிரியருடைய க்ரந்தங்களைப் பெரியவாச்சான் பிள்ளையின் க்ரந்தங்களாகக் கொள்வது அநுசிதமென்று பெரியார்களின் துணிபு.

பெரியவாச்சான் பிள்ளையின் கம்பீரமான ஸ்ரீ ஸூக்திகள் அமுதிலுமாற்ற வினியவை. இவ்வாசிரியர் அவதரியாதிருந்தால் ஸ்ரீ வைஷ்ணவவுலகுக்குப் பேரின்பவனுபவம் மிகவும் குன்றியேயிருக்கும். இவரது திருவடிகளே நமக்குத் தஞ்சம்.................................

பேரியவாச்சான் பிள்ளை வைபவம் முற்றிற்று.

---

# பிள்ளை லோகாசார்யர் வைபவம்.

வடக்குத் திருவீதிப்பிள்ளைக்குத் திருக்குமாரர்கள் இருவர். மூத்தவர் பிள்ளை லோகாசார்யர்; இளையவர் அழகியமணவாளப் பெருமாள் நாயனார். இவ்விருவரும் நைஷ்டிகப்ரஹ்மசாரிகள். ஐப்பசியில் திருவோணத்தன்று அவதரித்த பரமகாருணிகரான பிள்ளைலோகாசார்யருடைய பெருமையைச் சிறிது பேசி மகிழ்வோம். இவருடைய ஜ்ஞாநுனுஷ்டானப் பெருமைகள் ஒரு புறமிருக்க, பரமகருணையின் திறத்தை என்னென்று பகர்வது ?

ஆசாரியர்கள் பொதுவாக இருவகைப்படுவார்கள். அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யரென்றும் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்றும். சிஷ்யர்கள் பலகால்துவண்டு வேண்ட அதனாலே அநுக்ரஹிப்பவர்கள் அநுவ்ருத்திப்ரஸந்நாசார்யர்களாவார்கள். சிஷ்யப்ரார்த்தனையைச் சிறிதும் எதிர்பாராமல் தம்முடைய இயற்கையின்னருளால் தாமாகக் கனிந்து*பயனன்றாகிலும்பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப்பணி கொள்வதையே விரதமாகக் கொண்டு தம் பேறாக அநுக்ரஹித்தருள்பவர்கள் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யர்கள். நமது ஆசார்ய கோஷ்டியில் எம்பெருமானார் தாம் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்ற பட்டத்தை முதன்மையாகப் பெற்றவர். ஆயினும் அவர் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு க்ரந்தமும் அருளிச்செய்திலர். ப்ரஹ்மஸூத்ரங்களின் அர்த்தங்களை விவரிக்க மூன்று நூல்களையருளிச் செய்தவர் ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு சிறுநூலாவது அருளிச்செய்திருக்கலாம். இன்னுமொரு திருக்கோலம் பூண்டு [அதாவது, மணவாள மாமுனிகளாக அவதரித்து] அப்போது அருளிச் செய்யவேணுமென்று திருவுள்ளம் பற்றியிருந்தமையாலே, ஸ்ரீராமாநுஜரான அந்த அவதாரந்தன்னிலே ரஹஸ்யார்த்தங்களை ஏடுபடுத்தாமே சென்றனர். ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் முதலிய திவ்யக்ரந்தங்களில் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களும் ஆங்காங்குச் சேமிக்கப் பட்டேயிருந்தாலும் அவற்றைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித்தாராத குறை குறையே. அக்குறைதீரவே ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான பிள்ளை லோகாசாரியர் திருவவதரித்து, இவர் தாமே முதன் முதலாக ஸ்ரீவைஷ்ணவ மண்டலிக்கு மஹோபகாரஞ் செய்தருளினர்.

லோகாசார்ய ரென்கிற திருநாமம் முதலில் நம்பிள்ளைக்கு வழங்கிவந்தது. ஸ்வாசார்யர் திருநாமத்தையே புதல்வர்க்கு இடவேணுமென்று விருப்பங்கொண்ட இவரது திருத்தந்தையார் நம்பிள்ளையின் திருநாமத்தையே இவர்க்குச் சாத்தினர். வாசி தெரிவதற்காகப்

பிள்ளை லோகர்சார்யரென்று வழங்குதல் நிகழ்ந்தது. உபதேச ரத்தினமாலையில்—*பின்னை வடக்குத் திருவீதிப்பிள்ளை, அன்பாலன்ன திருநாமத்தை யாதரித்து, மன்னுபுகழ் மைந்தருக்குச் சாத்துகையால் வந்துபரந்ததெங்கும், இந்தத் திருநாமமிங்கு*என்றுள்ள பாசுரத்தினால் இஃதறியத்தக்கது. உண்மையில் லோகாசார்ய ரென்னுந் திருநாமம் இவர்க்கேதகும்.

இவ்விருள் தருமாஞாலத்தின் அகவிருளை அறவே யொழிக்கவல்ல திவ்ய ஸ்ரீஸூக்திகளைத் தேனும் பாலும் நெய்யும் கன்னலுமாக அளித்தருளினவர் இம்மஹாசார்யர். இவருடைய ஸர்வஜ்ஞத்வமும் பரமகாருணிகத்வமும் பரமப்ராமாணிகத்வமும் ஒவ்வொன்றும் நெஞ்சால் நினைப்பரிதே. ஒரு அர்த்தத்திலும் ஆக்ரஹமின்றிக்கே ஆசார்யபரம்பராப்ராப்தமான அர்த்தங்களையே அற்புதமாக அமைத்திருக்குமழகு இவருடைய திவ்யக்ரந்தங்களுக்கே அஸாதாரணச் செல்வமாயிருக்கும்.

இவரருளிச் செய்த நூல்கள் அஷ்டாதசரஹஸ்யமென்று ஸுப்ரஸித்தமாயிருக்கும். அவற்றுள் ஸ்ரீவசநபூஷணம் தத்வத்ரயம் முமுக்ஷுப்படி என்னும் மூன்று க்ரந்தங்கள் ஸூத்ரஸரணியில் திருவவதரித்தவை. இவற்றினுள்ளும் ஸ்ரீவசன பூஷணத்தின் பெருமை அப்ரமேயமென்று மணவாளமாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் ஏழு பாசுரங்களினால் மிகமிகக் கொண்டாடியருளுகிறார். *ஸர்வஜ்ஞ லோககுருநிர்மிதமார்யபோக்யம் வந்தே ஸதா **வசநபூஷண திவ்யசாஸ்த்ரம்*** என்று இந்த திவ்யக்ரந்தத்தை ஒரு திவ்யசாஸ்திரமென்றே வழங்குவர் பெரியார். இதற்கு மணவாளமாமுனிகளருளிச் செய்த வியாக்யானத்தின் அவதாரிகையிலுள்ள சில ஸ்ரீஸூக்திகளை இங்கெடுத்துக்காட்ட வேண்டியது அவச்யமாகிறது,—

“ஸம்ஸாரி சேதநரிழவு ஸஹிக்கமாட்டாத பரமக்ருபையாலே ததுஜ்ஜீவநார்த்தமாகத்தாமும் பலப்ரபந்தங்களருளிச்செய்த பிள்ளை லோகாசார்யர், ஆசார்ய பரம்பராப்ராப்தங்களான அர்த்தங்களில், அவர்கள் தாங்கள் கௌரவாதிசயத்தாலே ரஹஸ்யமாக உபதேசித்துப் போந்தவையாய், அருமைபெருமைகளைப்பற்ற இதுக்கு முன்புதாமும் ப்ரகாசிப்பியாமல் அடக்கிக்கொண்டு போந்தவையான அர்த்த விசேஷங்களெல்லாவற்றையும் பின்புள்ளாருமிழக்க வொண்ணாதென்கிற தம்முடையக்ருபாதிசயத்துக்கு மேலே பெருமாளும் ஸ்வப்நத்திலே திருவுள்ளமாயருளுகையாலே ஸ்ரீவசந பூஷணமாகிய இப்ப்ரபந்த முகேந வெளியிட்டருளுகிறார். முன்பே பேரருளாளப் பெருமாள் தம்முடைய நிர்ஹேதுகக்ருபையாலே மணல்பாக்கத்திலேயிருப்பாரொரு நம்பியாரை விசேஷகடாக்ஷம் பண்ணியருளி தஞ்சமாயிருப்பன சில அர்த்த விசேஷங்களைத் தாமே அவர்க்கு ஸ்வப்நமுகேந அருளிச்செய்து ‘நீர் போய் இரண்டாற்றுக்கு நடுவே வர்த்தியும்; இன்னமுமக்கு இவ்வர்த்தங்களை யெல்லாம் விசதமாக நாம் அங்கே சொல்லுகிறோம்’ என்று திருவுள்ளமாயருளுகையாலே அவரிங்கே வந்து (பெரிய) பெருமாளை ஸேவித்துக் கொண்டு, தமக்கு முன்பு அங்கருளிச் செய்த அர்த்தங்களையும் அசலறியாதபடி அநுஸந்தித்துக் கொண்டு ஏகாந்தமானதொரு கோயிலிலே வர்த்தியா நிற்கச் செய்தே, தம்முடைய ஸ்ரீ பாதத்துக்கு அந்தரங்கரான முதலிகளும் தாமுமாக பிள்ளை ஒரு நாள் அந்தக் கோயிலிலே யாத்ருச்சிகமாக வெழுந்தருளி, அவ்விடம் ஏகாந்தமாயிருக்கையாலே ரஹஸ்யார்த்தங்களை அவர்களுக்கருளிச் செய்து கொண்டு எழுந்தருளியிரா நிற்க, அவை தமக்குப் பேரருளாளப் பெருமாளருளிச் செய்த அர்த்த விசேஷங்களாயிருக்கையாலே அவர் போர வித்தராய் உள்ளில் நின்றும் புறப்பட்டு வந்து பிள்ளை ஸ்ரீ பாதத்திலே விழுந்து ‘அவரோ நீர்?’ என்ன, ‘ஆவதேது?’ என்று பிள்ளை கேட்டருள, பேரருளாளப் பெருமாள் தமக்கு இவ்வர்த்தங்களை ப்ரஸாதித்தருளின படியையும் இத்தேசத்திலே போக விட்டருளின படியையும் இன்னும் உமக்கங்கே விசதமாகச் சொல்லுகிறோமென்றருளிச் செய்தபடியையும் விண்ணப்பஞ் செய்ய, கேட்டு மிகவும் ஹ்ருஷ்டராய் அவரையும் அபிமானித்தருள, அவரும் அங்குத்தைக்கு அந்த

ரங்கராய் வர்த்திக்கிற நாளிலே, பெருமாள் அவர்க்கு ஸ்வப்நத்திலே 'இவ்வர்த்தங்கள் மறைந்து போகாதபடி இவற்றை யொருப்ரபந்தஸ்தமாக்கச் சொன்னோ மென்று நீர் பிள்ளைக்குச் சொல்லும்' என்று திருவுள்ளமாக, அவர் 'இப்படி பெருமாள் திருவுள்ள மாயருளினார்' என்று விண்ணப்பஞ் செய்ய, 'ஆனால் அப்படி செய்வோம்' என்று திருவுள்ளம் பற்றி அனந்தரம் இப்ப்ரபந்த மிட்டருளினா ரென்று ப்ரஸித்தமிறே." என்பவை வியாக்கியான ஸூக்திகள்.

மணவாள மாமுனிகள் ஆழ்வார் திரு நகரியிலிருந்து திருவரங்கம் பெரிய கோயிலுக் கெழுந்தருளின போது அங்கே பிள்ளை லோகாசார்ய ரெழுந்தருளியிருந்த விடத்திற்கு நித்திய மெழுந்தருளி "ரஹஸ்யம் விளைந்த மண்" என்று அவ்விடத்தே போர ப்ரதிபத்தி பண்ணி உகந்திருப்பர் என்று ப்ரஸித்தம்.

பிள்ளை லோகாசார்யர் வைபவம் முற்றிற்று.

---

# முக்கிய அறிவிப்பு

ஸ்ரீ ராமாநுஜனில் லோகாபிராமமான வியாஸங்கள் மாத்திரமே வெளியிடப்பட்டு வர வேண்டுமென்றும், பிற்பாடு புத்தகமாகச் சேர்த்து பயிண்டு செய்து கொள்ளக்கூடிய க்ரந்தங்கள் தனியாகவே வெளி வர வேண்டுமென்றும், அவை ஸ்ரீ ராமாநுஜனில் கலந்து வெளி வருவதில் பிறகு புத்தகமாகச் சேர்த்து பயிண்டு செய்வித்துக் கொள்ளப் பலவகையான அஸௌகரியங்களும் சிரமமும் ஏற்படுகிற தென்றும் பல ஆப்தர்கள் தெரிவித்துள்ளார்கள். இவ்வபிப்ராயத்தை நாம் வரவேற்கிறோம். இது மிகவும் யுக்தமான கொள்கையே. இப்போது ஸ்ரீ ராமாநுஜனில் வெளிவந்து கொண்டிருக்கிற ஸ்ரீரங்க ராஜஸ்தவ வியாக்கியானம் பூர்வசதகம் இரண்டொரு மாதங்களில் முடியப் போவதாயிருப்பதால் அதை மாத்திரம் 24ஆம் ஸஞ்சிகைக்குள் முடித்து விட்டு, மூன்றாவது வருஷ ஆரம்பத்திலிருந்து (அதாவது ஸ்ரீ ராமாநுஜன் நெ. 25லிருந்து) கீழ்க்கண்ட விதமாக நடத்திவர நிச்சயித்திருக்கிறோம்-; ஒரு மாதத்து ஸஞ்சிகையில் லோகாபிராமமான வியாஸங்களே வெளியிடப்படும்; மற்றொரு மாதத்து ஸஞ்சிகையில், பிறகு எடுத்து பயிண்டு செய்து வைத்துக் கொள்ளக் கூடிய க்ரந்தங்களே வெளியிடப்படும்; ஸ்ரீ ரங்க ராஜஸ்தவ உத்தர சதக வியாக்கியானம், ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை போன்ற க்ரந்தங்கள் என்று கொள்க. க்ரந்தங்கள் கொண்ட ஸஞ்சிகைகள் கட் பண்ணப் பெறாமலே வெளியிடப்படுமாகையால் பிறகு சேர்த்து பயிண்டு செய்து கொள்வதற்கு ஸௌகரியமாகவேயிருக்கும்.

இப்படிக்கு,
மானேஜர்-ஸத்க்ரந்தப்ரகாசந ஸபை.

---

# க்ரந்தலிபியின் தற்கால நிலைமை.

க்ரந்தலிபி யென்றால் இன்னதென்பதை அன்பர்கள் நன்கறிந்தவர்களே. ஸம்ஸ்க்ருத பாஷைக்கான இந்த லிபியானது நமது தென்னாட்டில் மாத்திரமே செல்லக்கூடியது. திருவேங்கடமலைக்கு இப்பாற்பட்ட காஞ்சீபுரப்ராந்தம் தொடங்கித் திருக்குறுங்குடி வரையிலுள்ள தமிழ்த் தேசங்களில் ஸம்ஸ்க்ருத வாங்மயங்களை யெழுதுமவர்கள் க்ரந்தலிபியைத்தான் தொன்று தொட்டு உபயோகித்து வருவது வழக்கம். நமது நாட்டில் பெரியார்களின் திருமாளிகைகளில் விளங்கும் ஸ்ரீ ராமாயண ஸ்ரீ பாகவத மஹாபாரதாதி இதிஹாஸ புராணங்களோ ஸ்ரீ பாஷ்ய

கீதாப'ாஷ்யாதி வேதாந்த க்ரந்தங்களோ காவ்ய நாடகாலங்காராதி க்ரந்தங்களோ [தாள கோசங்களான விவை] எங்கும் க்ரந்தலிபியிலேயே காணப்படுகின்றன.

நம்முடைய பூர்வாசார்யர்கள் வடமொழி தென்மொழி விரவிய மணிப்ரவாள நடையில் க்ரந்தங்களருளிச் செய்யத் தொடங்கின போது, தமிழ் லிபியோடு வேற்றுமையின்றி அழகாக இணங்கக் கூடியதாய் க்ரந்தலிபியை அமைத்துக் கொண்டார்களென்றும், ஆளவந்தா ரென்கிற ஸ்ரீமத் யாமுநாசார்யரே இந்தக்ரந்த லிபியை ஏற்பாடு பண்ணி யருளினு ரென்றும் சில பெரியார் சொல்லக் கேட்டதுண்டு. கன்னட லிபியும் தெலுங்கு லிபியும் பெரும்பாலு மொத்திருப்பது போல, மலேயாள லிபியும் க்ரந்த லிபியும் பெரும்பாலு மொத்திருக்கையாலே அநாதி காலமாகவே நமது நாட்டில் க்ரந்த லிபியுண்டு என்பாரு முளர். இது எப்படியாயினுமாகுக. ஆயிரமாண்டுகட்கு மேற்பட்ட காலமாகவே நமது நாட்டில் க்ரந்த லிபி வேரூன்றி யிருக்கிற தென்பது நிர்விவாதமான விஷயம். தொண்ட நாடு சோழ நாடு பாண்டி நாடு என்னுமிந்த நாடுகளில் தமிழ் வழங்குமவர்கள் ஸம்ஸ்க்ருத பாஷைக்காக க்ரந்த லிபி தவிர வேறு எந்த லிபியையும் அறியாதிருந்தார்கள் என்பது ஒருவரும் ஆக்ஷேபிக்க முடியாத நிர் விவாதமான விஷயம். தெலுங்கு லிபியையோ தேவநாகர லிபியையோ அடியோடு அறியாமலே யிருந்தார்கள்.

அச்சுக் கூடங்கள் தலைப்பட்டு, நமக்கு ஆவச்யகங்களான நூல்க ளெல்லாம் பெரும்பாலும் தேவநாகர லிபியிலும் தெலுங்கு லிபியிலும் அச்சிடப்பட்ட போது நம்மவர்களுங் கூட அந்த லிபிகளிலே பரிசயம் பெறத் தொடங்கினுர்கள். செந்தமிழ் நாடுகளில் வஸிக்கும் பல பெரியார்கள் இன்றைக்கும் அந்த லிபிகளை யறியாதாராய் க்ரந்த லிபியிலமைந்த நூல்களைக் கொண்டே போது போக்கி வருகிறுர்களென்பதையும் நாம் கண்டு வருகிறோம். ஆனால், முப்பது நாற்பது வருஷங்களுக்கு இப்பாற்பட்டவர்கள் ஸம்ஸ்கிருத நூல்களை வாசிக்க நியமேந தேவநாகர லிபியையே கைப்பற்றத் தலைப்பட்டு விட்டார்கள். சிலர் தெலுங்கு லிபியில் பரிசயம் செய்தாலும் செய்வதுண்டு; க்ரந்த லிபியில் பரிசயம் செய்வார் ஒருவருமிலரென்றே சொல்லலாம். நூற்றுக்கு மூவரிருவர் தேறினுல் தேறக் கூடும்.

இப்போது பிராசீன முறையில் ஸம்ஸ்கிருதம் கற்பவர்கள் ஒருவருமில்லையே. எண்ட்ரன்ஸ், பிலிமினரி, சிரோமணி என்று சொல்லிக் கொண்டு இந்த முறையில்தானே கற்கிறுர்கள். இப்படியாகக் கற்பிக்கும் கலாசாலைகளில் தேவநாகர லிபியையே ஆதரித்தும் க்ரந்த லிபியை வெகு தூரத்தில் விலக்கியு மிருப்பதால் இந்த லிபி பிரசார மடைவதற்கு அவகாசமில்லையாயிற்று. இது மிகவும் சோசநீயமான விஷயமாகவே யுள்ளது. ரஹஸ்ய வ்யாக்யானங்கள் திவ்யப்ரபந்த வியாக்கியானங்கள் முதலான நமது ஸம்ப்ரதாய க்ரந்தங்களில் அபரிமிதமான ஸம்ஸ்க்ருத ச்லோகங்களும் வாக்யங்களும் கலந்துள்ளன. பேருக்குத் தமிழ் நூல்களே யொழிய ஸம்ஸ்க்ருத பஹுளங்களானவை- அந்த ஸம்ஸ்க்ருத பாகங்களை இதுவரையில் க்ரந்த லிபியிலேயே அச்சிட்டு வந்திருக்கிறுர்கள். இப்போது அந்த லிபியின் பிரசாரம் குன்றி விட்டது மாத்திரமே யல்லாமல் அதில் பலர்க்குப் பகையு முண்டாய் விட்டதாகத் தெரிகிறபடியால் இப்போது அந்த லிபியை உபயோகிக்க முடியாமலிருக்கிறது. தமிழோடு இணங்க மாட்டாததான நாகர லிபியை இதில் கொண்டு கூட்டவும் முடியாமலிருக்கிறது. தேசாபிமானம் பாஷாபிமானம் போலே லிபி யபிமானமும் அவசியமாதலால் ஸம்ஸ்கிருதாபிமானிகளும் மணிப்ரவாள க்ரந்த ப்ரவணர்களுமான நம் நாட்டினர் யாவரும் க்ரந்த லிபிப் பயிற்சியை உபேக்ஷித்திடாமல் அவசியம் அபேக்ஷிக்க வேண்டு மென்று பிரசாரம் செய்க.

---

297. காயுங் கடுஞ்சிலை யென்காகுத்தன். ... (5-4-3)
298. கொடியானிலங்கை செற்றான். .... (5-6-9)
299. இலங்கை செற்ற வம்மான். ... (5-7-3)
300. மாறில் போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார், ... (6-1-10)
301. மன்னுடையிலங்கை யரண்காய்ந்த மாயவன். ... (6-2-1)
302. காண்பெருந் தோற்றத்துக் காகுத்த நம்பி. ... (6-6-9)
303. ஆவா வென்னாதுலகத்தை யலைக்குமசுரர் வாணாள்மேல் தீவாய் வ்வாளிமழை பொழிந்த சிலையான். ... (6-10-4)
304. புணராநின்ற மரமேழன்றெய்த வொருவில் வலவன். ... (6-10-5)
305. அடலாழி யேந்தி யசுரர்வன்குலம் வேர் மருங்கறுத்தான். .... (7-1-5)
306. காகுத்தன். ... (7-2-3)
307. பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை செற்ற பிரான். ... (7-3-7)
308. மாறுநிரைத் திரைக்கும் சரங்கள் இனநூறு பிணம்மலைபோல் புரளக் கடலாறு மடுத்து உதிரப் புனலா நீறுபட இலங்கை செற்றவப்பன். ... (7-4-7)
309. புற்பாமுதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்பாலுக்குய்த்த விராம பிரான், ... (7-5-1)
310. நாட்டைநலியு மரக்கரை நாடித்தடிந்திட்டு நாட்டை யளித்து உய்யச்செய்தான். ... (7-5-2)
311. ஆளியைக்காண் பரியாய் அரிகாண் நரியாய் அரக்கருளையிட்டன் றிலங்கை கடந்து பிலம்புக் கொளிப்ப மீளியம்புள்ளைக்கடாய் விறல்மாலியைக் கொன்று பின்னும் ஆளுயர் குன்றங்கள் செய்தடர்த்தான். ... (7-6-8)
312. ஆண்டிறல் மீளிமொய்ம்பினரக்கன் குலத்தைத் தடிந்து மீண்டு மவன் தம்பிக்கே விரிநீரிலங்கையருளி ஆண்டுதன் சோதிபுக்க வமரரரியேறு. ... (7-6-9)
313. அமரது பண்ணி யகலிடம் புடைசூழடுபடையவித்த வம்மான். ...
314. செருக்கடுத்தன்று திகைத்த வரக்கரை யுருக்கெட வாளி பொழிந்த வொருவன். ... (8-6-2)
315. புகழும்பொருபடையேந்திப் போர்புக்கசுரரைப் பொன்றுவித்தான்... (8-9-3)
316. கணையொன்றாலே யேழ் மரமுமெய்த வெங்கார்முகில், ... (9-1-2)
317. காய்சினப் பறவை யூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில் போல் மாசின மாலி மாலி மானென்றங்கவர்படக் கனன்று முன்னின்ற காய்சின வேந்தன். ... (9-2-6)
318. கூற்றமாயசுரர் குலமுதலரிந்த கொடுவினைப் படைகள் வல்லான். ... (9-2-9)
319. என்னுருயிர்க்காகுத்தன். ... (9-5-6)
320. பெயர்களாயிரமுடைய வல்லரக்கா புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதக மணித்தடம், ... (10-1-8)

இராமன் பாமாலை முற்றிற்று.

## ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன்

### பெரியாழ்வார் திருமொழி

1. மல்லாண்ட திண்டோள் மணிவண்ணன், (திருப்பல்லாண்டு) ... (1)
2. மாயப் பொருபடைவாணனை ஆயிரந்தோளும் பொழிகுருதி பாயச் சுழற்றிய ஆழிவல்லான். ... (7)
3. திருமதுரையுட் சிலைகுனித்தைந்தலையபைந்நாகத்தலைப்பாய்ந்தவன். ... (10)
4. வண்ணமாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்க் கண்ணன் (பெரியாழ்) ... (1-1-1)
5. சீருடைப் பிள்ளை, திருவோணத்தான். ... (1-1-3)
6. ஆயர் புத்திரனல்லாத அருந்தெய்வம், பாயசீருடைப் பண்புடைப் பாலகன், மாயன். .... (1-1-7)
7. மத்த மாமலை தாங்கிய மைந்தன். .... (1-1-8)
8. கோதைக்குழலாள் அசோதைக்குப் போத்தந்த பேதைக் குழவி. .... (1-2-1)
9. பணைத்தோளிளவாய்ச்சி பால்பாய்ந்த கொங்கை அணைத்தார வுண்டு கிடந்த பிள்ளை. ... (1-2-3)
10. உழந்தாள் நறுநெய் ஓரோதடாவுண்ண இழந்தாள் எரிவினுல ஈர்த் தெழில் மத்தின் பழந்தாம்பாலோச்சப் பயத்தால் தவழ்ந்தான்.. (1-2-4)
11. பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத்துண்டிட்டு உறங்குவான் போலே கிடந்த பிள்ளை. .... (1-2-5)
12. மத்தக்களிற்று வசுதேவர் தம்முடைச் சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில் அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன். ... (1-2-6)
13. இருங்கைம் மதகளிறீர்க்கின்றவனைப் பருங்கிப் பறித்துக் கொண் டோடும் பரமன். ... (1-2-7)
14. வந்த மதலைக் குழாத்தை வலிசெய்து தந்தக் களிறுபோல் தானே விளையாடும் நந்தன் மதலை. ... (1-2-8)
15. பெருமா வுரலில் பிணிப்புண்டிருந்து அங்கிருமாமருதமிறுத்த பிள்ளை. ... (1-2-10)
16. நாள்களோர் நாலைந்து திங்களளவிலே தாளை நிமிர்த்துச் சகடத் தைச் சாடிப்போய் வாள் கொள் வளை யெயிற்றுருயிர் வவ் வினுன். ... (1-2-11)
17. மைத்தடங் கண்ணி அசோதை வளர்க்கின்ற செய்த்தலை நீலநிறத் துச் சிறுப் பிள்ளை, ... (1-2-12)
18. வண்டமர் பூங்குழல் ஆய்ச்சி மகனுகக் கொண்டு வளர்க்கின்ற கோவ லக் குட்டன். ... (1-2-13)
19. நோக்கியசோதை நுணுக்கிய மஞ்சளால் நாக்குவழித்து நீராட்டும் நம்பி. ... (1-2-15)
20. வசுதேவர் தம்மகனுய் வந்து திண்கொளசுரரைத் தேய வளர்ந் தவன். ... (1-2-16)
21. திருவின் வடிவொக்கும் தேவகி பெற்ற உருவு கரிய ஒளிமணி வண்ணன், ... (1-2-17)
22. மண்ணும் மலையும் கடலுமுலகேழு முண்ணுந் திறத்து மகிழ்ந் துண்ணும் பிள்ளை. ... (1-2-18)

23. முற்றிலும் தூதையும் முன் கைமேல் பூவையும் சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களைப் பற்றிப் பறித்துக் கொண்டோடும் பரமன்... (1-2-19)

24. அழகிய பைம்பொன்னின் கோல் அங்கைக்கொண்டு கழல்கள் சதங்கை கலந்தெங்குமார்ப்ப மழகன்றினங்கள் மறித்துத் திரிவான். ... (1-2-20)

25. வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட அஞ்சன வண்ணன். ... (1-3-10)

26. தன்முகத்துச் சுட்டிதூங்கத்தூங்கத் தவழ்ந்துபோய்ப் பொன்முகக் கிண்கிணியார்ப்பப் புழுதியளைந்தவன். ... (1-4-1)

27. தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய பேழை வயிற்றெம் பிரான். ... (1-4-9)

28. மைத்தடங் கண்ணியசோதை தன் மகன். ... (1-4-10)

29. மேலை யமரர்பதி மிக்கு வெகுண்டுவரக் காளநன்மேகமவை கல்லொடு கார்பொழியக் கருதி வரைக்குடையாக் காலிகள் காப்பவன். ... (1-5-2)

30. வானவர் தாம் மகிழ வன்சகடமுருள வஞ்சமுலைப்பேயின் நஞ்சமது உண்டவன், ... (1-5-4)

31. கானக வல்விளவின் காயுதிரக்கருதிக் கன்றது கொண்டெறியும் கருநிறக்கன்று. ... (1-5-4)

32. தேனுகனும் முரனும் திண்திறல் வெந்நரகன் என்பவர்தாம் மடியச் செருவதிரச் செல்லுமானை. ... (1-5-4)

33. மத்தளவும் தயிரும் வார்குழல் நன்மடவார் வைத்தன நெய் களவால் வாரிவிழுங்கி ஒருங்கொத்த விணைமருத முன்னிய வந்தவரை ஊருகரத்தினெடுமுந்திய வெந்திறலோன். ... (1-5-5)

34. கானகமாமடுவில் காளியனுச்சியிலே தூய நடம் பயிலும் சுந்தரன். ... (1-5-6)

35. துங்கமதக்கரியின் கொம்பு பறித்தவன் ....

36. ஆய மறிந்து பொருவான்எதிர்வந்த மல்லை அந்தரமின்றி யழித்தாடிய தாளிணையான். ....

37. நப்பினை தன்திறமா நல்விடையேழவிய நல்லதிறலுடைய நாதன் ... (1-5-7)

38. தப்பின பிள்ளைகளைத் தனமிகு சோதிபுகத் தனியொருதேர் கடவித் தாயொடு கூட்டியவப்பன், .... (1)

39. சட்டித்தயிரும் தடாவினில் வெண்ணெயுமுண் பட்டிக் கன்று. ... (1-6-5)

40. மன்னர்படப் பஞ்சவர்க்கன்று தேருய்த்தவன். ... (1-6-6)

41. புகழ்ப்பலதேவ னென்னும் தன்னம்பியோடப் பின்கூடச் செல்வான், ... (1-7-5)

42. மக்களுலகினில் பெய்தறியா மணிக்குழவி யுருவின் தக்கமாமணி வண்ணன் வாசுதேவன். ... (1-7-8)

43. பஞ்சவர் தூதனாய்ப் பாரதங்கைசெய்தவன். ...

44. நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கை புக்கு அஞ்சப் பணத்தின் மேல் பாய்ந்திட்டருள் செய்த அஞ்சன வண்ணன். ... (1-8-3)

45. நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத் தேறியவளும் திருவுடம்பிற் பூச ஊறிய கூனினை யுள்ளே யொடுங்க ஏறவுருவினான். ... (1-8-4)

46. கழல் மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி எழலுற்று மீண்டே யிருந்துன்னை நோக்குஞ் சுழலைப்பெரிதுடைத் துச்சோதனனை யழல விழித்தான். .... (1-8-5)

47. பூமிப் பொறை தீர்ப்பான் தேரொக்க வூர்ந்தான், காரொக்கு மேனிக்கரும் பெருங் கண்ணன். ... (1-8-6)

48. தரணியில் வேந்தர்களுட்க விசயன் மணித்திண்டேரூர்ந்தவன். ... (1-9-4)

49. பொத்தவுரலைக் கவிழ்த்து அதன்மேலேறித் தித்தித்த பாலுந் தடாவினில் வெண்ணெயும் மெத்தத் திரு வயிறுர விழுங்கிய வத்தன். ... (1-9-7)

50. மூத்தவை காண முதுமணற் குன்றேறிக் கூத்துவந்தாடிக் குழலாலிசைபாடி வாய்த்த மறையோர் வணங்க இமையவரேத்த நின்றவெம்பிரான். ... (1-9-8)

51. கற்பகக்காவு கருதிய காதலிக் கிப்பொழுதீவனென்றிந்திரன் காவினில் நிற்பனசெய்து நிலாத்திக்கும் முற்றத்துளுய்த்தவன். ... (1-9-9)

52. மெச்சூது சங்கமிடத்தான் நல்வேய்ஊதி பொய்ச் சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்ப் பத்தூர் பெறுதன்று பாரதங் கைசெய்தவத்தூதன். ... (2-1-1)

53. மலைபுரைதோள் மன்னவரும் மா ரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலை வளையத் திண்தேர் மேல் முன்னின்றான். .... (2-1-2)

54. காயுநீர்புக்குக் கடம்பேறிக் காளியன் தீயபணத்தில் சிலம்பார்க்கப் பாய்ந்தாடி வேயின் குழலூதி வித்தகனாய் நின்றவாயன். ... (2-1-3)

55. இருட்டில் பிறந்துபோயேழை வல்லாயர் மருட்டைத் தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாளப் புரட்டியவன். ....

56. அந்நாளாய்ச்சியர் பூம்பட்டுக்கொண்ட வரட்டன். .... (2-1-4)

57. நந்தன் மனைவி கடைதாம்பால் சோப்பூண்டு துள்ளித்துடிக்கத் துடிக்க வாப்புண்டான். .... (2-1-5)

58. துப்பமும் பாலும் தயிரும் விழுங்கிய வப்பன், .... (2-1-5)

59. அசோதை இளஞ்சிங்கம், கொத்தார் கருங்குழல் கோபாலகோளரி யத்தன். ... (2-1-7)

60. கஞ்சனை வஞ்சனையால் வலைப்படுத்தினான். ... (22-3-)

61. இருமலைபோலெதிர்ந்த மல்லரிருவர் அங்கமெரிசெய்தான். ... (2-2-8)

62. பேய்ப்பால் முலையுண்டபித்தன். .... (2-2-1)

63. மலையையெடுத்து மகிழ்ந்து கன்மாரிகாத்துப் பசு நிரை மேய்த்தான். ... (2-3-7)

64. ஏர்விடை செற்றிளங்கன்றெறிந்திட்ட இருடீகேசன். ... (2-3-10)

65. சகடமுதைத்திட்ட பற்பநாபன். ... (2-3-11)

66. முன்வஞ்சமகளைச் சாவப்பாலுண்டு சகடிறப் பாய்ந்திட்ட தாமோதரன். ... (2-3-12)

67. கஞ்சன்புணர்ப்பினில் வந்தகடிய சகடமுதைத்து வஞ்சகப் பேய்மகள் துஞ்ச வாய்முலைவைத்தபிரான். ... (2-4-4)

68. எண்ணெய்க்குடத்தையுருட்டி இளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக் கண்ணைப் புரட்டி விழித்துக் கழைகண்டு செய்யும் பிரான். ... (2-4-5)
69. கன்றினை வாலோலைகட்டிக் கனிகளுதிரவெறிந்து பின்தொடர்ந் தோடியோர்பாம்பைப் பிடித்துக்கொண்டாட்டினுன். ... (2-4-7)
70. பேயின் முலையுண்டபிள்ளை, மாயச்சகடும் மருதுமிறுத்தவன். ... (2-5-2)
71. திண்ணக்கலத்துத்திரையுறிமேல் வைத்த வெண்ணெய் விழுங்கி விரையவுறங்கிடுமண்ணலமரர் பெருமான். ... (2-5-3)
72. பள்ளத்தில் மேயும் பறவையுருக்கொண்டு கள்ளவசுரன் வருவானைத் தான் கண்டு புள்ளிது வென்று பொதுக்கோ வாய்கீண்டிட்ட பிள்ளை. ... (2-5-4)
73. கற்றினம்மேய்த்துக் கனிக்கொருகன்றினைப் பற்றியெறிந்த பரமன் ... (2-5-5)
74. கிழக்கிற் குடிமன்னர் கேடிலாதாரையழிப்பான் நினைந்திட்டு அவ் வாழியதனால் விழிக்கு மளவிலே வேரறுத்தான். .... (2-5-6)
75. வேலிக்கோல் வெட்டி விளையாடு வில்லேந்தித் தாலிக் கொழுந்தைத் தடங் கழுத்திற்பூண்டு பீலித்தழையைப் பிணைத்துப் பிறகிட்டுக் காலிப்பின் போவான். ... (2-6-1)
76. கறுத்திட் டெதிர்நின்ற கஞ்சனைக்கொன்றான், பொறுத்திட் டெதிர் வந்த புள்ளின் வாய்கீண்டான், நெறித்த குழல்களை நீங்க முன் னோடிச் சிறுக்கன்று மேய்ப்பான். .... (2-6-3)
77. ஒன்றே யுரைப்பான் ஒருசொல்லே சொல்லுவான். பாரதங்கை யெறிந்தான். .... (2-6-4)
78. பாரதங்கைசெய்து பார்த்தற்குத் தேரொன்றை யூர்ந்தான். .... (2-6-4)
79; பாலப்பிராயத்தே பார்த்தற்கருள் செய்த கோலப்பிரான். .... (2-6-6)
80. தேனிலினிய பிரான். ... (2-7-1)
81. மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம் மிடம்புக்குக் கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்புதுகிலவைகீறி நிச்சலும் தீமைகள் செய்வான். .... (2-7-3)
82. புள்ளினைவாய் பிளந்திட்டான், பொருகரியின் கொம்பொசித்தான்..... (2-7-5)
83. கருதிய தீமைகள் செய்து கஞ்சனைக் கால்கொடுபாய்ந்தான், தெருவின் கண் தீமைகள் செய்து சிக்கென மல்லர்களோடு பொருது வருகின்றபொன். ... (2-7-6)
84. குடங்களெடுத்தேற விட்டுக் கூத்தாட வல்லவெங்கோ, மடங்கொள் மதிமுகத்தாரைமால் செய்யவல்ல வென்மைந்தன், ... (2-7-7)
85. சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லான் சாமாறவனை யெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டான், ... (2-7-8)
86. கள்ளச் சகடும் மருதும் கலக்கழிய உதைசெய்த பிள்ளையரசு. ... (2-8-7)
87. கஞ்சன் கறுக்கொண்டு வஞ்சிப்பதற்கு விடுத்த கருநிறச் செம்மயிர்ப் பேயைப் பிடித்து முலையுண்ட பரமன். ...(2-8-6, 2-8-7)
88. கும்பக்களிறட்டகோ, கொடுங்கஞ்சன் நெஞ்சினில் கூற்று. ... (2-7-8)
89. வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அத னோசை கேட்கும் கண்ணபிரான். ... (2-9-1)
90. வளைதுகில் கைக்கொண்டு காற்றிற் கடியனாயோடி யகம்புக்கு மாற்ற மும் தாரான்! .... (2-10-1)

91. வண்டமர் பூங்குழலார் துகில்கைக்கொண்டு விண்டோய் மரத்தான். ... (2-10-2)

92. தடம்படு தாமரைப்பொய்கை கலக்கி விடம்படுநாகத்தை வால் பற்றியீர்த்துப் படம்படுபைந்தலே மேலெழப் பாய்ந்திட்டு உடம்பையசைத்தான். ... (2-10-3)

93. தேனுகனுவி செகுத்துப் பனங்கனி தானெறிந்திட்ட தடம் பெருந் தோளினல் வானவர்கோன்விட வந்த மழைதடுத்து ஆனிரை காத்தான். .... (2-10-4)

94. ஆய்ச்சியர்சேரி அளேதயிர் பாலுண்டு பேர்த்தவர் கண்டுபிடிக்கப் பிடியுண்டு வேய்த்தடந்தோளினர் வெண்ணெய் கொள்மாட்டா தங்காப்புண்டிருந்தான். .... (2-10-5)

95. தள்ளித்தளர்நடையிட் டிளம்பிள்ளேயாய் உள்ளத்தினுள்ளே அவளேயுற நோக்கிக் கள்ளத்தினல் வந்த பேய்ச்சி முலேயுயிர் துள்ளச் சுவைத்தான். ... (2-10-6)

96. தன்னேராயிரம் பிள்ளேகளோடு தளர்நடையிட்டு வருவான் பொன்னேய் நெய்யொடு பாலமுதுண்டு ஒரு புள்ளுவன் பொய்யே தவழும் மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள் கொங்கை துஞ்ச வாய் வைத்த பிரான். ... (3-1-1)

97. வன்பாரச்சகடமிறச்சாடி வடக்கிலகம்புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவஞ் செய்து வைத்த அன்பன். ... (3-1-2)

98. கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கிக் குடத்தயிர் சாய்த்துப் பருகிப்பொய்ம்மாயமருதானஅசுரரைப்பொன்றுவித்தான். ... (3-1-3)

99. மையார் கண் மடவாய்ச்சியர் மக்களேமையன்மை செய்து அவர்பின் போய்க் கொய்யார் பூந்துகில் பற்றித்தனி நின்று குற்றம் பல பல செய்தான். .... (3-1-4)

100. முப்போதும் கடைந்தீண்டிய வெண்ணெயினேடு தயிரும் விழுங்கிக் கப்பாலாயர்கள் காவிற் கொணர்ந்த கலத்தொடு சாய்த்துப் பருகி மெய்ப்பாலுண்டழு பிள்ளேகள்போல விம்மி விம்மி யழுகின்றவப்பன். .... (3-1-5)

101. கரும்பார் நீள்வயல் காய்க்கதிர்ச் செந்நெலேக் கற்றுநிரை மண்டித் தின்ன விரும்பாக்கன்றென்று கொண்டு விளங்கனி வீழ வெறிந்த பிரான். ... (3-1-6)

102. சுரும்பார் மென் குழல் கன்னியொருத்திக்குச் சூழ் வலே வைத்துத் திரியுமரம்பன். ... (3-1-6)

103. சுருட்டார் மென்குழல் கன்னியர் வந்து சுற்றுந்தொழ நின்றசோதி..... (3-1-7)

104. பிறர் மக்களே மையன்மை செய்து தோளாலிட்டவரோடு திளேத்துச் சொல்லப்படாதன செய்தான். .... (3-1-8)

105. காய்வார்க்கென்று முகப்பனவே செய்து கண்டார் கழறத்திரியு மாயன். .... (3-1-9)

106. தொத்தார் பூங்குழல் கன்னியொருத்தியைச் சோலேத்தடங்கொண்டு புக்கு முத்தார் கொங்கை புணர்ந்து இராநாழிகை மூவேழு சென்ற பின் வந்தான். .... (3-1-10)

107. அஞ்சன வண்ணன், ஆயர் கோலக்கொழுந்து. .... (3-2-1)
108. பற்று மஞ்சள் பூசிப் பாவைமாரொடு பாடியில் சிற்றில் சிதைத்தெங்கும் தீமை செய்து திரிவான். ... (3-2-2)
109. நன்மணிமேகலை நங்கைமாரொடு நாள்தொறும் பொன் மணி மேனி புழுதியாடித் திரிவான். ... (3-2-3)
110. வண்ணக் கருங்குழல் மாதர்வந்தலர்தூற்றிடப் பண்ணிப்பல செய்து ஆய்ப்பாடியெங்கும் திரிவான். .... (3-2-4)
111. அவ்வவ்விடம் புக்கு அவ்வாயர் பெண்டிர்க்கணுக்கனுய்க் கொவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்வான். ... (3-2-5)
112. மிடறு மெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப்போய்ப் படிறு பல செய்து ஆய்ப்பாடி யெங்குந்திரிவான். ... (3-2-6)
113. வள்ளிநுடங்கிடைமாதர் வந்தலர்தூற்றிடத் துள்ளி விளையாடித் தோழரோடு திரிவான். ... (3-2-7)
114. பன்னிருதிங்கள் வயிற்றில் கொண்டவப்பாங்கினுல் அசோதை யமுதூட்டி யெடுத்த இளஞ்சிங்கம். ... (3-2-8)
115. குடையும் செருப்பும் கொடாதே கடியவெங்கானிடைக் காலடி நோவக் கன்றின்பின் போக்கிய பிள்ளை. ... (3-2-9)
116. பேடைமயிற் சாயல் பின்னைமணாளன். .... (3-3-3)
117. பற்ருர் நடுங்க முன் பாஞ்ச சன்னியத்தை வாய்வைத்த போரேறு .... (3-3-5)
118. பொய்கைபுக்கு நஞ்சுமிழ் நாகத்திஞேடு பிணங்கினுன். ... (3-3-6)
119. கன்றினுருவாகி மேய்புலத்தே வந்த கள்ளவசுரன் தன்னைச் சென்று பிடித்துச் சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தான். ... (3-3-7)
120. கோவலரிந்திரற்குக் காட்டிய சோறும் கறியும் தயிரும் கலந்துடனுண்டான். ... (3-3-8)
121. அட்டுக்குவிசோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறும் அடங்கப் பொட்டத்துற்றி மாரிப்பகை புணர்த்த பொருமாகடல் வண்ணன். ... (3-5-1)
122. செப்பாடுடைய திருமாலவன். ... (3-5-6)
123. தடங்கை விரலைந்தும் மலர வைத்துத் தடவரை தாங்கு தாமோதரன். ... (3-5-7)
124. வன்பேய் முலையுண்டதோர் வாயுடையன். .... (3-5-9)
125. வானிளவரசு வைகுந்தக்குட்டன் வாசுதேவன் மதுரை மன்னன் நந்தர் கோனிளவரசு கோவலர் குட்டன் கோவிந்தன். ... (3-6-3)
126. தேனுகன் பிலம்பன் காளியனென்னுந் தீப்பப் பூடுகளடங்கவுழக்கிக் கானகம்படி யுலாவி யுலாவிக் குழலூதின கருஞ்சிறுக்கன், ... (3-6-4)
127. செம்பெருந்தடங்கண்ணன் திரடோளன் தேவகி சிறுவன் தேவர்கள் சிங்கம், ... (3-6-6)
128. அருங்கலவுருவினுயர் பெருமான். .... (3-6-10)
129. மல்லலைரையட்டவன். ... (3-8-1)
130. சாடிறப்பாய்ந்த பெருமான். ... (3-8-6)

131. நந்தகோபன் மகன் கண்ணன். ... (38-8)

132. என்னுதன் தேவிக்கு அன்றின்பப்பூவீயாதாள் தன்னுதன் காணவே தண் பூமரத்தினை வன்னுதப் புள்ளால் வலியப்பறித்திட்ட என்னுதன். ... (3-9-1)

133. உருப்பிணி நங்கையத் தேரேற்றிக் கொண்டு விருப்புற்றங்கேக விரைந்தெதிர் வந்து செருக்குற்றுன் வீரஞ்சிதையத் தலையைச் சிரைத்திட்டான். ... (3-9-3)

134. பஞ்சவர்தூதனுய்ப் பாரதங்கை செய்து நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டருள் செய்த அஞ்சனவண்ணன். .... (3-9-5)

135. காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு அவன் நீண் முடியைந் திலும் நின்றுநடஞ் செய்து மீளவவனுக்கருள் செய்த வித்தகன். ... (3-9-7)

136. மாயச்சகடமுதைத்து மருதிறுத்து ஆயர்களோடு போய் ஆநிரை காத்து அணிவேயின் குழலூதி வித்தகனுய் நின்ற ஆயர்களேறு. ... (3-9-9)

137. கொலையானைக் கொம்பு பறித்தான். .... (4-1-3)

138. ஆயர்மடமகள் பின்னைக்காகி அடல்விடையேழினையும் வீயப் பொருது வியர்த்து நின்றுன். ... (4-1-4)

139. வாரேறு கொங்கையுருப்பிணியை வலியப்பிடித்துக்கொண்டு தேரேற்றிச் சேனை நடுவுபோர் செய்தான். .... (4-1-5)

140. பொல்லா வடிவுடைப் பேய்ச்சிதுஞ்சப் புணர்முலை வாய்மடுக்க வல்லான் பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறி துவரை எல்லாரும் சூழச்சிங்காசனத்தே யிருந்தான். ... (4-1-6)

141. வெள்ளைப் புரவிக்குரக்கு வெல் கொடித்தேர்மிசை முன்பு நின்று கள்ளப்படைத்துணையாகிப் பாரதம் கைசெய்தான். ... (4-1-7)

142. நாழிகை கூறிட்டுக் காத்து நின்ற அரசர்கள் தம்முகப்பே நாழிகை போகப்படை பொருதவன் தேவகிதன் சிறுவன், ஆழிகொண்டு அன்று இரவி மறைப்பச் சயத்திரதன் தலையைப் பாழிலுருளப் படைபொருதவன். .... (4-1-8)

143. ஆனுயர் கூடியமைத்த விழவை அமரர்தம் கோனுர்க் கொழியக் கோவர்த்தனத்துச் செய்தான். ... (4-2-4)

144. கஞ்சன் தனெருவாரண முயிருண்டவன். ... (4-2-5)

145. ஏவிற்றுச் செய்வான் ஏன்றெதிர்ந்து வந்த மல்லரைச் சாவத் தகர்த்த சாந்தணிதோள் சதுரன். .... (4-2-6)

146. மன்னர் மறுக மைத்துனன்மார்க்கொருதேரின்மேல் முன்னங்கு நின்று மோழை யெழுவித்தவன். .... (4-2-7)

147. எட்டுத் திசையுமெண்ணிறந்த பெருந்தேவிமார் விட்டுவிளங்க வீற்றிருந்த விமலன். .... (4-2-10)

148. உருப்பிணிநங்கைதன்னை மீட்பான் தொடர்ந்தோடிச் சென்ற வுருப்பனை யோட்டிக் கொண்டிட்டுறைத்திட்ட வுறைப்பன். .... (4-3-1)